பண்டிதமணியின்

# அறுபதாம் ஆண்டு நிறைவு விழா

# நிகழ்ச்சியும் பாராட்டும்

மதுரை. ஸ்ரீ மீனாக்ஷி மில்லின் நிருவாகத் தலைவர்

திருவாளர்

கருமுத்து. தியாகராஜச் செட்டியார் அவர்களால்

வெளியிடப்பெற்றது.

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
※ கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

சென்னை, ஜுபிடர் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1942

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

# பதிப்புரை

"அறிவுடையார் எல்லா முடையார்" எனவும் "கல்வி யழகே யழகு" எனவும் பெரியார் கூறியதற்கு இலக்காகப் புகழொடு தோன்றிய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்களின் பெருமையைத் தமிழகம் நன்கு அறியும். இவர்கள் திருவாசகம், பெரிய புராணம், திருக்குறள், சிலப்பதிகார முதலிய ஒப்புயர்வற்ற தமிழ்நூற் பெருங்கடலுண் மூழ்கிப் பேரானந்தம் எய்துதலைக் கண்டு, கற்றாரும் கல்லாரும் களிப்பெய்தி இன்ப வெள்ளத்திற் றிளைப்பதுண்டு. இங்ஙனம் தாம் நுகரும் இலக்கியப் பேரின்பத்தைப் பிறரும் நுகர்ந்தின்புறக் கண்டு மகிழும் பண்டிதமணியவர்கள் இந் நிலவுலகத்தில் பல்லாண்டு வாழ்ந்து தவப்பயனால் தமிழகத்திற் பிறந்த மக்களை இன்னும் தமிழ்நூற் பெருங்கடலுண் மூழ்குவித்து அரும்பொருண் முத்துக்களைக் குளித்தெடுத்து இன்புறச் செய்யும் வண்ணம் தமிழன்னை இவர்களுக்கு எல்லா நலங்களையும் அருளுவாளாக. இப் பெரியாருடைய அறுபதாம் ஆண்டு விழாச் சிறப்பை நேரிற் கண்டின்புற்றவர்களே யன்றித் தமிழ் நிலத்தா ரெல்லாரும் அறிந்து மகிழும் நிமித்தம், சிறப்புடன் நடந்த அத் திருவிழா நிகழ்ச்சி அச்சிடப் பெறுவதாயிற்று.

மதுரை,
21-2-42.

கருமுத்து. தியாகராஜன்.

பண்டிதமணியின் அறுபதாண்டு

**நிறைவு விழா**

**12-10-1941**



*செட்டி நாட்டு ராஜா சர் அவர்களும், பண்டிதமணியும், நண்பர்களும்.*

கணபதி துணை

# பண்டிதமணியின்

## அறுபதாம் ஆண்டு நிறைவு

# விழா நிகழ்ச்சியும் பாராட்டும்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப் பேராசிரியராக வீற்றிருந்து ஓய்வு பெற்றிருப்பவர்களும், தென்மொழி வடமொழிப் புலமை மிக்காரும் ஆகிய முதுபெரும்புலவர் பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவுச் சாந்தித் திருமணம் மகிபாலன்பட்டியில் அவர்கள் இல்லத்தில் நிகழும் விஷு ஆண்டு புரட்டாசித் திங்கள் 26-ஆம் நாள் (12-10-1941) ஞாயிற்றுக் கிழமை காலை 11-மணிக்கு மிக்க சிறப்பாக நடைபெற்றது. அவ் விழாவிற்குத் தென்மொழி வடமொழி வல்ல புலவர் பெருமக்களும், பெருஞ் செல்வர்களும், சுற்றத்தாரும், மற்றைய அன்பர்களும் ஆயிரவரின் மேலாக வந்திருந்தனர். பண்டித மணி அவர்களது அழகிய மாளிகையின் நடுவண் அமைக்கப் பெற்ற மண மண்டபம் தோரணங்களாலும், நறுமண மிக்க மலர் மாலைகளாலும், ஓவியங்களாலும் நன்கு அலங்கரிக்கப் பட்டிருந்தது. காலையில் பண்டிதமணியவர்கள் தம் மனைவி யாரோடு நீராடி விநாயக வழிபாடு செய்து வந்து மணவறை யின்கண் அமர்ந்தனர். நான்மறை முதுநூல் நன்கனம் நவிற்றிய வேதியர், விதிப்படி வேள்வி செய்தனர். திருநெல் வேலி இசைமணி திருவாளர் சுந்தர ஓதுவா மூர்த்திகளும், அவருடைய இசைத்துணைவர்களும் இன்னிசைக் கருவிகளு டன் தேவாரத் திருமறைகளை உள்ளம் உருக ஓதினர். இனிய வாத்தியங்கள் முழங்கின. விதிப்படியுள்ள சாந்திக் கிரியைகள் நன்கு செய்யப் பெற்றன. பண்டிதமணியார் தம் அரிய வாழ்க்கைத் துணைவியாராகிய திரு. மீனாட்சி

ஆச்சியுடன் கங்கை முதலிய புண்ணிய நதிகளின் நறுநீர் கலந்து புதிய கலசங்களில் நிறைக்கப் பெற்ற மஞ்சன நீரால் மங்கல நீராடல் செய்து பெரியோர்கள் வாழ்த்துரை வழங்கத் தம் மனைவியாருக்குத் திருமங்கல நாண் பூட்டினர். பின்னர்த்,திருக்கோயிலுக்குச் சென்று இமையவர் வணங்கும் உமையொரு பாகனைத் தரிசித்து வணங்கி வந்து அந்தணர் களுக்கும் வறியவர்களுக்கும் முறைப்படி அன்னமும் பொரு ளும் அன்புடன் நல்கினார்கள். அன்று கூடிய சுற்றத்தாரும் நண்பர்களும் புலவர்களும் உணவு முதலியவற்றால் சிறந்த முறையில் நன்கு உபசரிக்கப்பட்டனர். 1500 ஏழை மக்க ளுக்கு இனிய சுவையுடன் கூடிய உணவு அளிக்கப்பட்டது.

பண்டிதமணியவர்கள் நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் மொழிக்கும் தமிழ் நாட்டிற்கும் ஆற்றி வரும் சிறந்த தொண்டுகளைப் பாராட்டுவதற்கும், இவ் விழாவின் நினைவுக் குறியாக வெளியிடப்பட்ட "மணிமலர்" என்னும் புத்த கத்தை அவர்களுக்குப் பரிசிலாக அளிப்பதற்கும் அன்று பிற்பகல் 4 மணிக்கு ஒரு பாராட்டுக் கூட்டம் அவர்கள் இல்லத்தில் நடைபெற்றது. அக்கூட்டம் திருவாளர்களாகிய அழ. சுப. பழ. சுப்பிரமணியன் செட்டியார், பெ. ராம. ராம. சிதம்பரஞ் செட்டியார், நீ. கந்தசாமிப் பிள்ளை, கருமுத்துத் தியாகராஜச் செட்டியார், வ. பழ. சா. சாமிநாதன் செட்டி யார், சி. ராம. இராமசாமிச் செட்டியார் என்னும் அறுவ ரடங்கிய பாராட்டுக் கழகத்தார் முயற்சியால் நடத்தப் பட்டது. ஆண்பாலாரும் பெண்பாலாருமாக 1000 பெயர் களுக்குமேல் கூடியிருந்தனர். முதலில் தேவிகோட்டை திரு. அழ. சுப. பழ. சுப்பிரமணியன் செட்டியார் எழுந்து, பண்டிதமணியாரின் தென்மொழி வடமொழிப் பயிற்சியை யும், மதிநுட்பம் நூலோடமைந்துள்ள புலமைத் திறனையும் தமிழ் மொழிக்கு அவர்கள் ஆற்றி வரும் நன்மைகளையும் இவ் வமயம் அவர்களைப் பாராட்டுவதன் இன்றியமையாமை யையும் எடுத்துக் கூறி, அக்கூட்டத்திற்குத் தலைவராக இருக் கும்படி செட்டி நாட்டு ராஜா சர் Dr. அண்ணாமலைச் செட்டியா ரவர்களை வேண்டிக்கொள்ள, கனம் ராஜா சர் அவர்கள் தலை வராக வீற்றிருந்தனர். புகைப் படம் எடுக்கப்பட்டது. இசைமணி திரு. சுந்தர ஓதுவா மூர்த்திகள் இன்னிசையுடன் கடவுள் வாழ்த்துக் கூறினர். பாராட்டுக் கழகத்தார்

ராஜா சர் அவர்களுக்கு ஒரு *நல்வரவேற்புப் பத்திரம் படித்துக் கொடுத்தார்கள். இனிய பாடல்களாலமைந்த அதனை, திரு. சி. இராமசாமிச் செட்டியார் இசையுடன் படித்தனர். அதன்பின் தலைவராகிய கனம் ராஜா சர் அவர்கள், பண்டிதமணியவர்களின் மாண்புகளைப் பற்றி மிக்க மனமகிழ்ச்சியுடன் பாராட்டிச் †சிறந்த முன்னுரை கூறினார்கள். அம் முன்னுரை ராஜா சர் அவர்கள் பண்டிதமணியாரிடம் வைத்திருக்கும் பேரன்பைப் புலப்படுத்தி அதன் அறிகுறியாகத் திகழ்ந்து எல்லோரையும் இன்புறுத்தியது. முடிவில் பாராட்டுக் கழகத்தார் விருப்பின்படி ராஜா சர் அவர்கள் "மணிமலர்" என்னும் கட்டுரைத்திரட்டை அழகிய வெள்ளிப் பேழையில் வைத்துப் பண்டிதமணியவர்களுக்குப் பரிசிலாக வழங்கினார்கள். பின்னர் முறையே கரந்தைத் தமிழ்ச் சங்கத்து அமைச்சர் திரு. நீ. கந்தசாமிப் பிள்ளையவர்களும், திரு. ச. சோமசுந்தர பாரதியார் M.A.B.L., அவர்களும், சென்னை திரு. T. P. மீனாட்சி சுந்தரம் பிள்ளை M.A. B.L., M.O.L., அவர்களும் பண்டிதமணியவர்களின் வடமொழி தென்மொழிப் புலமை, செய்யுள் இயற்றுந் திறம், நூல் செய்யும் வன்மை, சொல்லாற்றல், அரிய பெரிய நூல்களின் நுண்பொருள்களை விளக்கி மாணவர் உள்ளங்கொள்ளுமாறு எடுத்துரைக்குந் திறமை, நகைச் சுவை தோன்றப் பேசுதல், நூல் இன்பத்தில் திளைத்தல் முதலான அளப்பரும் குணஞ் செயல்களை விளக்கமாகப் பாராட்டி விரிவுரை நிகழ்த்தினார்கள்.

பின்னர் மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபை, கரந்தைத் தமிழ்ச் சங்கம், திருச்சி அன்பர்கள் சங்கம், நெற்குப்பை விவேகானந்த வாசகசாலை முதலிய பல சங்கங்களிலிருந்து வந்த வாழ்த்துப் பத்திரங்கள் அவ்வச் செயலாளர்களால் படித்துக் கொடுக்கப்பட்டன. சன்மார்க்க சபைப் பழைய மாணவர்கள் தங்கள் வாழ்த்துப் பாடல்களை வெள்ளிப் பேழையில் வைத்துக் கொடுத்தார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து நகரத்தார் மாணவர் கழகத்தார் வாழ்த்துப்

---

* இது பின் சேர்க்கப்பட்டுள்ளது.

†தலைவர் முன்னுரையும், மற்றை அன்பர்களின் பாராட்டுரைகளும், வாழ்த்துப் பாடல்களும் பிறவும் இதன்கண் முறையே சேர்க்கப்பட்டுள்ளன.

பத்திரம் படித்துக் கொடுத்துச் சில வெள்ளிப் பாத்திரங்களையும் பரிசிலாக வழங்கினார். வேந்தன்பட்டித் தமிழ் வித்தியாசாலை ஆசிரியர் திரு. வெங்கடராமையரவர்கள் திருநீறு அடங்கிய வெள்ளிச் சம்புடம் ஒன்றை அன்புடன் அளித்தனர். ஆங்கு வந்திருந்த தமிழ்ப் புலவர்களிற் பலர் தாங்கள் இயற்றிய வாழ்த்துப் பாடல்களைப் படித்துக் கொடுத்தார்கள். வெளியூர்களிலிருந்து சைவ மடாதிபதிகளும், பல பெரியார்களும அனுப்பிய வாழ்த்துத் தந்திகளும், கடிதங்களும் படிக்கப்பட்டன. வெளியூர்களிலிருந்து வந்த வாழ்த்துப் பாடல்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாசிரியர் பண்டிதர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் படித்தனர்.

முடிவில், பண்டிதமணி கதிரேசச் செட்டியார் எழுந்து தமது சாந்தித் திருமணத்தின் நிமித்தம் மிக்க அன்புடன் வந்து தலைமை வீற்றிருந்து சிறப்பித்த செட்டிநாட்டு ராஜா சர் அவர்களுக்கும், பாராட்டுக் கூட்டம் நடத்தி "மணி மலர்" பரிசளித்துச் சிறப்பித்த அன்பர்களுக்கும், வாழ்த்துரை வழங்கிய பெரியார்களுக்கும், தமக்கு உதவியாக நின்று வந்தவர்களை உபசரித்துச் சிறப்பித்த உள்ளூர், வெளியூர் அன்பர்களுக்கும் தம் நன்றியறிவை வெளிப்படுத்திக் கூறினர். நற்சாந்துபட்டி திரு. பெ. ராம. ராமசிதம்பரஞ் செட்டியார் அவர்கள் பாராட்டுக் கழகச் சார்பில் கூட்டத்திற்கு வந்து சிறப்பித்த எல்லோர்க்கும் வந்தனோபசாரம் கூறினார்கள். கூட்டம் மாலை 7-மணிக்கு மங்களகரமாக நிறைவேறியது.

**ராஜா சர் அவர்கள் முன்னுரை வருமாறு :—**

கனவான்களே,

நாம் எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து மகிழ்ச்சி அடையும் சந்தர்ப்பங்களில் இது ஒன்றாகும். இன்றைய தினம் பண்டிதமணி யவர்களுக்கு அறுபது ஆண்டுகள் பூர்த்தியாகி அறுபத்தோராவது ஆண்டு பிறக்கின்றது. நம்முடைய இனத்தாரில் ஒருவராகிய பண்டிதமணி யவர்களுடைய பெருமையையும் குணங்களையும் பாஷாஞானத்தையும் நம் இனத்தாரேயன்றி, இந்தத் தமிழ் நாடு முழுவதும் நன்கு அறியும். இவர்களுடைய சாந்தி விழாவைச் சிறப்புடன் நடத்தி

வைப்பதால் நாம் பண்டிதமணி யவர்களுக்குப் பெருமையைச் செய்வதோடு நம்மையும் கௌரவித்துக் கொள்கிறோம். நம்மினத்தவரில் ஒருவரும் சிறந்த புலவருமாகிய பண்டிதமணியவர்களுடைய சாந்திவிழாவைச் சிறப்பாக நடத்தி வைக்க ஏற்பாடுகள் செய்திருப்பதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சி யடைகிறேன். இந்த விழாவில் கலந்து கொள்ளவும், பண்டிதமணி யவர்களைப் பற்றிச் சில வார்த்தைகள் பேசவும் எனக்கு ஒரு சந்தர்ப்பம் தந்திருப்பதை நான் மிகவும் பிரியத்துடன் பாராட்டுகிறேன்.

ஸ்ரீமாந் பண்டிதமணியவர்கள் தமிழ், சம்ஸ்கிருதம் என்ற இரண்டு பாஷைகளிலும் உள்ள நூல்களின் நயங்களை நன்றாக அறிந்தவர்கள். தாம் இன்புறும் நூல் நயங்களை மற்றவர்களும் அறிந்து இன்பமடைய வேண்டும் என்னும சிறந்த நோக்கத்துடன் புத்தகங்களை இயற்றி யிருக்கின்றார்கள். “சுக்கிர நீதி”, “மண்ணியல் சிறுதேர்”, “கடோபாசனை”, “உதயண சரிதம்”, “மாலதி மாதவம்” முதலிய நூல்கள் இவர்களால் இயற்றப் பெற்றவை. இந் நூல்கள் இவர்களுடைய பாஷா ஞானத்தையும், மொழிபெயர்க்கும் பெருமையையும் விளக்குகின்றன. இரண்டு பாஷைகளில் நல்ல தேர்ச்சி இருந்தாலொழிய இவ்விதமான நூல்களை இயற்ற முடியாது. பண்டிதமணி யவர்களுடைய அறிவினாலும், ஊக்கத்தினாலும், அன்பினாலும் எழுதி வெளியிடப் பெற்றிருக்கும் இந் நூல்கள் தமிழ் நாட்டிலே சிறந்த நூல்களாக விளங்கும்.

இருமொழி வல்ல இப் புலவர் நூல்களை எழுதி வெளியிட்டதோடு நின்றுவிடவில்லை. நமது நாட்டு மாணவர்கள் கல்வியறிவிலும், தமிழ்ப் பயிற்சியிலும், நல்லொழுக்கத்திலும், சிறந்து விளங்கவேண்டுமென்று பெரிதும் முயன்று வருகிறார்கள். அண்ணாமலைச் சர்வகலாசாலையில் தலைமைப் பேராசிரியராக இருந்திருக்கிறார்கள். அப்பொழுது இவர்களிடம் தமிழ் கற்ற மாணவர்கள் கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கம் முதலியவற்றில் மேன்மை அடைந்திருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. இவர்களுடைய கல்வியறிவையும், கற்பிக்கும் முறையையும், தமிழ்ப் பாஷைக்குச் செய்துவரும் சேவையையும் புகழ்ந்து போற்றாத மாணவர்களும், ஆசிரியர்களும், வித்வான்களும் இருக்கமாட்டார்கள் என்றே சொல்லலாம்.

மதுரைத் தமிழ்ச் சங்கம், கரந்தைத் தமிழ்ச் சங்கம் முதலிய சங்கங்கள் பல வருஷங்களாக இவர்களுடைய சம்பந்தம் பெற்றுச் சிறப்படைவதை யாவரும் அறிவார்கள்.

சுவாமி விபுலாநந்தர், ஸ்ரீமான்களான சோமசுந்தர பாரதியார், வி. எஸ். சீனிவாசாச்சாரியார், டி. பி. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, வேங்கடசாமி நாட்டார், ரா. இராகவை யங்கார், இலக்குமணப் பிள்ளை, சுப்பிரமணிய பிள்ளை, டி. கே. சிதம்பரநாத முதலியார் முதலிய சிறந்த அறிவாளி கள் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் அடங்கிய "மணி மலர்" ஒன்று இன்று இவர்களுக்கு அளிக்கப் பெறுவதி லிருந்து இவர்களுடைய புலமையும் புகழும் சிறந்து விளங்கு வதை அறிந்துகொள்ளலாம். அன்பு மணம் வீசி, அறிவு ஒளியைப் பெருக்குவதற்கு அடையாளமாக விளங்கும் இந்த "மணிமலர்" பண்டிதமணி யவர்களிடத்தில் பல பண்டிதர் களுக்கும் அறிவாளிகளுக்கும் உள்ள அன்பையும், மதிப்பை யும் காட்டுவதன்றித், தமிழ் மொழிக்கும் தமிழ் நாட்டிற்கும் இவர்கள் இன்னும் பல வருஷங்கள் சிறந்த சேவை செய்து உதவ ஊக்கத்தையும் தருவதாகும்.

திட்டங்களை யனுசரித்து வயது காரணமாக, பண்டிதமணி அவர்கள் சர்வகலாசாலைப் பேராசிரியர் பதவியிலிருந்து விலக வேண்டியதாயிற்று. இவர்கள் விலகி யது வருந்தத்தக்கது. ஆயினும் இவர்களுக்குத் தமிழ்ப் பாஷையை விருத்தி செய்யவேண்டுமென்ற ஆவலும், மாண வர்களுடைய நன்மைக்குத் தம்மாலியன்ற உதவிகளைச் செய்யவேண்டுமென்ற விருப்பமும் குறையாமல் மேலும் மேலும் விருத்தியாகுமென்பதே எனது நம்பிக்கை. சர்வ கலாசாலையுடன் உத்தியோக முறையில் இவர்கள் இப் பொழுது தொடர்பு வைத்திராவிடினும், அதன் புகழும் பெருமை யும் அதிகரிக்கவும், அவ்விடத்தில் கல்வி பயிலும் மாணவ மாணவிகளுடைய தமிழறிவு பெருகவும் இவர்கள் மனமுவந்து எப்பொழுதும் உதவி வருவார்கள் என்பது நிச்சயம்.

நமது தனவணிகருடைய நாட்டில் மேலைச் சிவபுரியில் இப்பொழுது நடைபெற்று வருகிற சன்மார்க்க சபையைத் துவக்கி வைத்த பெருமை நமது பண்டிதமணி யவர்களுடை யதே யாகும். இவர்களுடைய உதவியையும் ஒத்துழைப்பை

யும் பெற்று இந்தச் சபை சிறந்து விளங்குவதை நாம் அறி வோம். தமிழ்ப் பாஷையை வளர்ப்பதிலும், மாணவர்கள் முன்னேற்றமடைவதிலும், அவர்கள் சன்மார்க்கப் பயிற் சியை அடையவேண்டு மென்பதிலும் இவர்களுக்கு உள்ள ஊக்கத்தைக் காட்டி நிற்கும் சிறந்த உதாரணமாக இது விளங்குகிறது. தமிழ்ப் பாஷையையும் சைவ சமயத்தையும் வளர்க்கவேண்டுமென்ற நோக்கத்துடன் நடைபெற்று வரும் இந்தச் சன்மார்க்க சபை இவர்களுடைய முயற்சியாலும், ஆதரவாலும், மேலும் மேலும் விருத்தியடைந்து, சிறந்த பலனைக் கொடுக்குமென்று நான் நம்புகிறேன்.

இவர்கள் இப்பொழுது அறுபது வயது நிரம்பப் பெற் ருலும், தாய்ப் பாஷையாகிய தமிழை நமது நாட்டு மக்களுக் கும், மாணவர்களுக்கும் போதிப்பதிலும், தமிழ் நூல்களை ஆராய்ச்சி செய்வதிலும், இதர பாஷையில் உள்ள நூல் களின் நயங்களை அறிந்து அந்த நூல்களைத் தமிழில் மொழி பெயர்ப்பதிலும் மிகவும் ஊக்கமுடையவர்களாகவே இருக் கிருர்கள்.

தமிழ்ப் பேராசிரியராக மாத்திரம் நமது பண்டிதமணி யவர்கள் புகழ் பெறவில்லை. அறிவும் ஆராய்ச்சியும் நிறைந்த கட்டுரைகள் பல எழுதியும் பாஷையின் வளர்ச்சிக்குப் பேருதவி செய்திருக்கிருர்கள். இவர்களுடைய அறிவையும் பெருமையையும் சிறப்பாக விளக்குவது இவர்களுடைய அருமையான சொற் சாதுரியந்தான். சபையோருடைய மன தைக் கவரும்படி எளியவும், இனியவுமான சொற்களால் சுவை தோன்றப் பேசித் தமிழ் நூல்களில் உள்ள உயர்ந்த கருத்துக்களை விளக்கிப் பிரசங்கம் செய்வதில் பண்டிதமணி யவர்கள் மிகவும் சிறந்தவர்கள். திருக்குறள், சிந்தாமணி, சிலப்பதிகாரம், தேவாரம், திருவாசகம், பெரிய புராணம், இராமாயணம் முதலிய அரிய பெரிய நூல்களில் உள்ள சொல் நயங்களையும், பொருள் நயங்களையும், ஆழ்ந்த கருத் துக்களையும், கேட்பவர்கள் மன மகிழ இவர்கள் பிரசங்கம் செய்யவல்லவர்கள் என்பதை நான் இங்குப் புதிதாகக் கூற வேண்டுவதில்லை. தமிழ் சமஸ்கிருதம் என்ற இரண்டு பாஷைகளையும் மற்றவர்களுக்கு எடுத்து விளக்கும் சாமர்த் தியம் உள்ளவர்கள் மிகச் சிலரே யாவர். இத் துறையில் பண்டிதமணியவர்கள் வித்துவான்கள் வியக்கும் பெருமை பெற்று

விளங்குகிறார்கள். இன்னும் இவர்கள் இத் துறையில் முயன்று நமது பாஷையையும் நாட்டையும் சிறப்பிப்பார்கள் என்று சொல்வது மிகையாகாது.

கல்வி கற்பிப்பதிலும், ஆராய்ச்சி செய்வதிலும், சிறந்த நூல்களைத் தமிழில் மொழி பெயர்ப்பதிலும், மற்றவர்களுக்குப் பயனுண்டாகும்படி அருமையான கட்டுரைகளை எழுதுவதிலும், அறிவைப் பெருக்கத் தகுந்த பிரசங்கங்களைச் செய்வதிலும் சிறப்பு வாய்ந்த புலவர் பெருமானாகிய நமது பண்டிதமணி யவர்களுடைய சாந்தி விழாவை இன்று நாமெல்லாரும் ஒரே மனதாய்ச் சிறந்த விமரிசையுடனும் அன்புடனும் கொண்டாடுகிறோம். இவர்களுடைய புலமையைப் பாராட்டிப் பல அறிவாளிகள் தங்கள் வாழ்த்துப் பாக்களை அனுப்பியிருப்பதும், தங்கள் அன்பிற்கும் மரியாதைக்கும் அடையாளமாக இந்த 'மணிமலரை' இவர்கள் இருக்கும் இடத்திற்கு இன்று கொண்டுவந்து கொடுப்பதும் நம்மனைவருக்கும் மகிழ்ச்சியைத் தருவதாகும். அன்பர்களாலும், புலவர்களாலும், தமது இனத்தாராலும் போற்றிப் புகழ் பெறும் பெருமை வாய்ந்த இம் முதுபெரும் புலவர் வழிவழி சிறந்து, பல நலங்களையும் அடைந்து, நீடூழி வாழவேண்டுமென்றும், தமிழ் நாட்டிற்கும், தமிழ்ப் பாஷைக்கும் இதுவரையில் செய்து வந்தது போலவே இன்னும் பல வருஷங்கள் அரிய தொண்டு செய்துவர வேண்டுமென்றும் எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிய வேண்டிப் பிரார்த்தித்து இம் மணிமலரை ஸ்ரீமாந் பண்டிதமணி யவர்களிடம் மகிழ்ச்சியுடன் கொடுக்கின்றேன்.

**திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை யவர்கள் பேசியவை வருமாறு :—**

பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியா ரவர்களுடைய கல்வியும், அறிவும், இலக்கியச் சுவைகளை அநுபவிக்கும் உணர்வும் பல்லாண்டுகளாக அவர்களுடன் பழகிய எனக்குப் பெரிதும் உவகையளிப்பன. கலை யறிவோடு சிறந்த உலகிய லறிவும் படைத்தவர்கள். பேச்சு வன்மையும் செய்யுள் உரைநடை எழுதும் வன்மையும் சிறக்கப் பெற்றவர்கள். அறிஞர் உள்ளத்தைக் கவரத் தக்க முறையில் நகைச் சுவை ததும்ப உரையாடும் இவர்கள் ஆற்றலை வியு

வாதார் இல்லை. சைவ சமய நூல்களையும் சங்க இலக்கியங்களையும் இவர்கள் நுணுகி யுணர்ந்ததோடு பிறர்க்குத் தெளிவு பெற எடுத்துரைக்கும் வன்மையிலும் சிறந்தவர்கள். இத்தகைய இவர்களுக்கு அறுபதாண்டு நிறைவுறும் இந் நன்னாளில் பல பேரறிஞர்களுடைய ஆராய்ச்சிக் கட்டுரைகளடங்கிய ஒரு புத்தகத்தை இவர்களுக்கு வழங்க வேண்டுமென்று யானும் என் நண்பர் திரு. பெ. ராம. ராம. சிதம்பரஞ் செட்டியாரவர்களும் நினைந்து அறிஞர்களை வேண்டித் தொகுத்து அச்சிட்டோம். இக் கட்டுரைத் தொகுதி அறிவொளியும் பொருள் மணமும் உடைமையால் இதற்கு "மணிமலர்" என்னும் பெயர் பொருந்துமெனக் குறிப்பிடலானேம். இலக்கியச் சுவை நலத்தையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்ட திரு. பண்டிதமணியார்க்கு இவ் வாராய்ச்சித் தொகுதியாகிய மணிமலர்ப் பரிசு பொருந்துமென்பது எங்கள் உட்கிடையாகும். இம் மணிமலரைப் பண்டிதமணியவர்களிடத்து உண்மை அன்புடையவர்களும் சிறந்த பெருங்கொடை வள்ளலுமாகிய செட்டி நாட்டு ராஜா சர் அவர்கள் தம் கைகளால் பண்டிதமணியவர்களுக்குக் கொடுக்க உடன்பட்டு முன்வந்தது மிகவும் பாராட்டத்தக்கது. பண்டிதமணியார் மனைவி மக்களுடன் நீடுவாழ்க என இறைவன் திருவருளை வேண்டுகின்றேன்.

**திரு ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள், M.A., B.L. பேசியவை வருமாறு:**

மாட்சிமை தங்கிய செட்டி நாட்டு மன்னரவர்களே! மன்று புகழுடைப் பண்டித மணியவர்களே! பெரியோர்களே! பெருமாட்டிகளே!

இங்கு நடைபெறும் நல்விழா அறிவுலகிற் புகாத வெறுஞ் செல்வர்களைச் சிறப்புச் செய்வதற்கன்று: இரு பெரு மொழிகளின் விரிவோடாழமும் அளந்து நிலைகண்டு அருந்தமிழ் விநோதராய்ப் பொருளொடு புகழும் மருளறு நெறி மாண்பும் எய்திய பண்டிதமணியைப் பாராட்டுதற்கென்று அறிந்து மகிழ்கின்றேன். அம் மகிழ்ச்சி இன்று மூன்று காரணங்களால் முறையே மும்மடங்கு பெருகி விரிகின்றது.

முதலாவது மக்கள் படும் இன்னல்களெல்லாம் பேதைமை, புல்லறிவாண்மைகளால் ஆதலால் அவற்றைத் தொலைத்து நல்லறிவை நாடோறும் வளர்க்கும் கல்வியை நாடெல்லாம் பரப்பும் கடன் மேற்கொண் டொழுகும் செட்டிநாட் டரசரே, நிரம்பிய புலமை வரம்புகண் டுவக்கும் பண்டிதமணிகளின் அறுபதாண்டு நிறைவைக் கொண்டா டும் கூட்டத்திற்குத் தலைமை வீற்றிருக்கும் பொருத்தம் உவகையைப் பெருக்கி இனிமை தருவதாகும். அறிவும் திருவும் விரியும் புகழும் உரிமை கொள்ளும் அரசர் அண்ணாமலை வள்ளல் நம் பண்டித மணியின் பெருமை யறிந்து இவர்களைத் தாம் நிறுவிய பல்கலைக் கழகத் தமிழ்த் தலைவர் ஆக்கிச் சீரொடு சிறப்பும் செய்தது அவர்கள் தக வளர்ந்து தெளிந்து தேறும் வினைமாட்சியை விளக்குவதாகும். முப்பெருங் கழகமும் ஒருங்கு தேர்ந்து பண்டிதமணிக்குத் தமிழ்த் தலைமை தந்து வியந்தது, அரசரவர்களின் நிறலை உலகறியச் சான்று தந்து விளக்குவதாகும். அத் தகு புலவ ரின் வைர வெள்ளணி விழாவில் தலைமை தாங்குதல் தமிழ்ப் புலமைக்கும் தமக்குமே தகுமெனத் துணிந்து வந்திருந்து நடத்தும் பெருமையை நாம் எல்லோரும் பாராட்டும் கடப் பாடுடையோம்.

இனி இரண்டாவதாகத் தமிழர் தமிழ்ப் புலவரைப் பாராட்டுவது அரிதில் இனிய பெரிய காட்சி. அச்சமும் அவாவும் தூண்டுங்கால் அதிகாரிகளின் விருப்பத்திற்காகத் தமிழர் அல்லார் ஒரு சிலரைப் புலமையைப் பேரளவில் புலனுக்கி உண்மையில் தந்நலங் கருதிக் கொண்டாடும் கூட்டங்கள் இடையிடையே நிகழ்வதுண்டு. அங்ஙன மின்றிப் பதவியும் பெரு நிதியும் உதவும் சிறப்பில்லாத நிலை யில் புலமையைப் பேணித் தமிழ்ப் புலவரைத் தமிழர் கூடிப் பாராட்டும் இவ் விழாவை இன்று நான் காண்பதால் என் மகிழ்ச்சி இருமடங்காகி வளர்கின்றது.

மூன்றுவதாக எங்களிடையே முப்பதாண்டுகளாகத் தொடங்குநாள் தொட்டு நெகிழ்ச்சியும் நெரிவும் இன்றிச் செறிந்து வளரும் நட்புப் பயிரை அறிவு நீராற் செழுமை கொள்ளச் செய்துவரும் நம் பண்டிதமணியவர்களின் பெரு விழாவில் பட்டம் பதவி அதிகாரம் ஒன்றும் இல்லாத எனக்கும் இடங் கிடைத்ததை நினைத்து என் மகிழ்ச்சி மூன்று

முறையாக மும்மடங்கு பெருகி மலர்கின்றது. என் நெடு வாழ்க்கையின் முதலில் ஆங்கிலமன்றித் தமிழிற் பேசி யறியாத என்னைத் தாய்மொழியில் தமிழர் கூட்டத்தில் பேச வைத்து அத் துறையில் ஊக்கித் தமக்கினியர் குழுவில் என்னையும் சேர்த்து அன்பு காட்டும் பண்டிதமணியவர் களின் வயதொடு வளரும் புகழை வளர்க்கும் புலமையின் நிறைவைப் பாராட்டும் பெரியாரிடை எனக்கும் இடந் தந்தார் அன்பை நினைந்து மகிழ்கின்றேன். ஞாயிறு தனக்குப் பேரொளி வளர்வது இயல்பே போல கல்வி ஒளி திகழும் கதிரேச நாவலரின் ஒல்காப் புகழ் தமிழகத்து ஒளிர்வதும் இயல்பாகும். இவர் கேட்டார்ப் பிணித்துக் கேளாரும் வேட்ப மொழியுஞ் சொல்லின் செல்வர்; சிவ நெறிக் கிழவர்; கல்வியமுதருந்தி மூவா இளநல முதிருணர்வு கனிந்து கமழும் வித்தகர். இத்தகையார்க்கு இன்னும் பல்லாண்டு வாழ்நாள் உயர்க. இவர்கள் தமிழ்த் தாய்க்கு அன்புப் பணி யாற்றுக. ஆண்டுதோறும் அளவிலா அறிவு நூல் இயற்றித், தமிழகம் உவக்கத் திருவாசகம் திருத் தொண்டர் புராணம், தேவர் சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய நூற்பெரும் பாற்கடல்களைக் கடைந்து சுவைநல மிக்க பொருளமிர்தத்தை யெடுத்துத் தாமும் நுகர்ந்து பிறர்க்கும் ஊட்டி நல்வாழ்வு எய்துக.

ஊக்கமும் ஆக்கமும் இறைவன் திருவருளாற் பெற்று நீடு வாழ்க.

சென்னை வித்துவான் திரு. T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர் கள் M.A., B.L., M.O.L. பேசியவை வருமாறு:—

என் நண்பர் பண்டிதமணியின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவில் கலந்துகொள்ள நேர்ந்தமைக்குப் பெரி தும் மகிழ்ச்சியடைகின்றேன். "பண்டிதமணியின் அறிவாற் றல் மிகுதியை நோக்க அம்மட்டில் எங்களுடன் போட்டி போடாதபடி ஆங்கிலம் தெரியாது போய்விட்டது நல்ல தாயிற்று" என்று நகைச்சுவைபடத் திருவாளர் பாரதியார் கூறினார். ஆனால் யாரோ அவருக்கு ஆங்கிலம் தெரியாமற் போய்விட்டதே யென வருந்திய நாட்கள் பல. அறிந்திருந் தால் உலகத்திற்குப் பெரிதும் பயன்பட்டிருப்பாரே. உலக

முழுதும் இவரை அறிந்திருக்குமே என இன்னும் வருந்து

ஆராய்ச்சியாளர்கள், பாக்களைப் பல வகையிற் பிய்த்துப் பிய்த்து ஆராய்கின்றார்கள். இலக்கண நுட்பம் காலம் கொள்கை என்றென்றெல்லாம் ஆராய்ச்சி காது செவிடுபட முழங்குகிறது. பாட்டின் இனிய சுவையைக் காதினிக்கக் கருத்தினிக்கத் துய்த்து வாயடங்கி மனமடங்கி நிற்கின்றவர்களைக் காண்பதரிது. ரோலோ என்ற ஆங்கில ஆசிரியரிடம் ஆங்கிலங் கற்கத்தொடங்கிய நாளில் பாட்டின் பெருமையைச் சிறிது உணர்ந்தேன். வெகுண்டும் வெறுத்தும் வெறி பிடித்து மயங்கியும் வீழ்ந்து புரண்டலறியும் உணர்வு குழம்பி நிற்கின்ற மக்கள் ஒருவர் கழுத்தை யொருவர் வெட்டியும் ஒருவர் தலைமேல் ஒருவர் இடியெரி வீசியும் இப்போது நடக்கும் போராட்டத்திடையே சிக்கி உழல்வது உலக நிலையாய் விட்டது. இவ்வாறு குழம்பிக் கலங்கிய உணர்ச்சி தெளிவடைவது பாவுலகில்தான். பாவுலகிற் சென்று தங்கள் விருப்பு வெறுப்புக்களைப் பண்படுத்திக் கொண்டோரது மனமே திருத்தமடைகின்றது. "நெஞ்சத்து நல்லம் யாம் என்னும் நடுவு நிலைமையாற் கல்வி யழகே யழகு" எனத் தோன்றுவது அங்கேதான். அரிஸ்டாடல் என்ற கிரேக்க ஆராய்ச்சியாளர் நம்முடைய மனம் கொந்தளிப்படங்கி விருப்பு வெறுப்பு முதலிய அழுக்கெல்லாம் கழுவப்பட்டுத் தூயதாய் அமைதியோடும் விளங்குவது பாட்டினால் எனக் குறித்துள்ளார். பாட்டில் தம்மை மறந்து மனம் ஒருமுகப்பட்டுச் சுவையைத் துய்த்து அமைதி பெறுவாரைக் கடவுட் காட்சி கைவரப் பெற்ற மெய்யுணர்வாளரோடு ஒப்பவைத்து எண்ணுகின்றது வடமொழி அணி நூல். அத்தகைய உணர்வின் வல்லவரே நம் பண்டிதமணியவர்கள். **பாட்டில் வருஞ் சொற்களைச் சுவையுலகாக மாற்றிவைக்கும் ரசமணியாவார் இவர்.** இவர் பேச்சைக் கேட்கும்போது கேட்போரும் ஒருமித்து அவரோடு பாட்டிற் சமாதி கூடிச் சாந்தி என்று புகழப்பெறும் மன அமைதியை அடைந்து வருவது கண்கூடு. **அந்த வகையில் இவர் ஒரு மகரிஷி; ஒரு ஆசாரிய பீடம்.** கடபட என்றுருட்டுகிறேன் என நினைத்தல் ஆகாது. அவ் வட சொற்கள், கருத்தைத் தெளிவாக விளக்குகின்றன. இத்தகைய சுவை

வாழ்வு இவரை முழுதும் மாற்றியமைத்துள்ளது. மெய்யுணர்வாளர்க்கு அடையாளமாகத் திருவள்ளுவர் கூறும் நகையும் உவகையும் இவரிடத்தே கூத்தாடுகின்றன. இவரை மாப்பிள்ளை என்று நான் விளையாட்டாகக் கூறுவதுண்டு. இவர் உடையிலும் அழகு, ஊணிலும் அழகு, பேச்சிலும் அழகு, மூச்சிலும் அழகு. தமிழ்க் கல்வித்திட்டக் குழுவிலும் தமிழ்த் தேர்வுக் குழுவிலும் தலைமை பூண்டு திறம்பட நடத்தி வருவதோடு, பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராகவும் விளங்கி வந்தார். செய்வன திருந்தச் செய்யும் திறமை சுவையுலகிற் புகுந்து அழகு நாட்டத்தில் ஈடுபட்டதால் இவரிடம் பிறந்தது எனலாம். கூப்பாடு பெருக இடம் இன்றிக் கேட்போர் நெருங்கியிருக்கக் குளிர்முகங் கொண்டு எல்லோரையும் நகைக்கடலில் மூழ்த்திக் கூட்டத்தை நடத்தும் பெருமையை இவரிடம் காணலாம். இவர் பேச்சிலேயே ஒரு நயப்புண்டு. அஃது இவருடைய கனிந்த உள்ளத்தமைதியிலிருந்தும் எழுகிறது. தாழ்விலும் இனிமை, வாழ்விலும் இனிமை, எங்கும் இனிமை, எல்லாம் இனிமை. இவ்வாறு தம்மையும் தம்மைச் சுற்றியுள்ளாரையும் மாற்றியமைக்கும் திறனுடையார் இவர். யான் சோற்றுத்துறையடிகளில் ஒருவன்; இவருடைய இல்லத்தில் அன்பு குழைந்த இன்ப விருந்துண்டு களித்து நாவில் இப்போதும் நீரூறி நிற்கின்றவரில் ஒருவன். மிகச் சிறந்த செல்வர்களும் அத்தகைய இனிய உணவைத் தங்கள் இல்லத்தில் அமைத்துக்கொள்ள முடியாது விழிக்கக் கண்டிருக்கிறேன். பண்டிதமணிக் கமைந்த அம்மையாரும் சுவையுலகில் வாழ்கின்றவர்கள். சுவையுலக வாழ்க்கை வாழ்வார்க்கே அனைத்தும் எளிதில் அமையும். ஆகவே இவரிடத்தே சுவையுலக வாழ்க்கையைக் கண்கூடாகக் காணலாம். இல்வாழ்க்கையிலும் இனிமை, உடையிலும் இனிமை, ஊணிலும் இனிமை, பேச்சிலும் இனிமை, மூச்சிலும் இனிமை, எழுத்திலும் இனிமை, குழுவிலும் இனிமை, இவர் பிறரைப் புகழ்வதிலும் இனிமை; இகழ்வதிலும் இனிமை. மரத்தைப் பழத்தால் அறிக என்பார் கிறிஸ்து. ஈதே பழம். இனி மரத்தை அறிந்துகொள்க.

இவ்வாறு உலகை மாற்றியமைக்கக்கூடிய வாழ்க்கையே பாவாணர் வாழ்க்கை. இதனை மறந்ததாலேயே உலகம் போரிடையே சிக்கி மயங்கின்றது. இவர்க்கு ஆங்கிலம்

தெரிந்திருந்தால் இந்தப் பெரும் பயனை உலகம் அடைந்திருக்கும். ரவீந்திரநாத் டாகூரைப்போல இவ்ரையும் உலகம் மிக மிகப் போற்றியிருக்கும். இவரது இத்தகைய பெருமையை எங்கள் சென்னை நன்கு அறிந்திருந்தது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தே இருந்த வரையில் அடிக்கடி இவருடைய சொற்பொழிவைக் கேட்டு இன்புற்ற பல தமிழறிஞர்கள் அப் பல்கலைக் கழகத்தை விட்டனர் என்பது கேட்டு மிக மிக மனம் புழுங்கினர். சுவையுலகிற் கண்ட அழகுகளைப் பற்றி இப் பெரியார் குறித்துள்ளவற்றை விரைவில் வெளியிட்டால் எங்கள் மனம் சிறிது ஆறுதலடையும். இச் சுவை வாழ்வு மேலும் பரவும் வரை பண்டிதமணிகள் நூற்றாண்டுத் திருநாளும் கண்டு களித்து வாழ்வார்களாக.

**நன்றி கூறுமுகமாகப் பண்டிதமணியவர்கள் பேசியவை :—**

என் அறுபதாம் ஆண்டு நிறைவில் எனக்கு இத்துணைச் சிறப்புக்களைச் செய்து பெருமைப்படுத்த முதலில் நினைந்தவர்கள் என் இரு கண்களைப்போன்ற இனிய நண்பர்களாகிய திருவாளர் பெ. ராம. ராம. சிதம்பரஞ் செட்டியாரவர்களும் திரு நீ. கந்தசாமிப் பிள்ளையவர்களும் ஆவார்கள். இவர்கள் என்னிடத்து வைத்திருக்கும் பேரன்பிற்கு எல்லை யின்று. இவர்கள் இந் நன்னாளில் எனக்குப் பரிசிலாக வழங்குதற்குத் தொகுத்த இம் மணிமலரில் அடங்கிய பொருளுரைகள், என் அரிய நண்பர்களாகிய புலவர்களின் உள்ளக் கருவூலங்களிலிருந்து எடுக்கப்பட்ட மணிகளின் குவியலாகும். விலைமதிக்கொண்ணா இப் பரிசில் பெறுதற்கு என் நல்வினைப் பேறே காரணமாகும். இப் பரிசில் உதவ முன்வந்த இப் பெருந்தகையாளர்களுடைய உண்மையன்பை என்றும் மறவேன். உறவினரும் நண்பரும் அறிஞரும் புலவரும் கூடிய இப் பேரவையில் தலைமை வீற்றிருந்து சிறப்புச் செய்ய முன்வந்த பெருங்கொடை வள்ளலாகிய செட்டிநாட்டு ராஜா ஸர் அவர்கள், தம்முள்ளத்தில் எனக்கும் இடனளித்துச் செய்துவரும் பேருதவிகள் மிகப் பலவாம். ஓரளவு யான் கற்ற கல்வி, பொருள் நோக்கம் பற்றியதன்று; வாழ்க்கையில் இன்பம் எய்துதல் குறித்ததேயாம். அக் கல்விக்குப் பரிசிலாக என்னை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியனாக வைத்துச் சிறப்பித்த நன்றியை

என்றும் மறவேன். கனம் ராஜா அவர்களின் சாந்தி நாளில் அவர்கள் அழகிய மாளிகையில் உலகத்துப் பெருமக்களெல்லோரும் அடங்கியிருந்தனர். அவ் வெல்லோரையும் தம் பெருமையுள் அடக்கித் திகழும் அரசர் பெருந்தகையார் இன்று எனது இச் சிறு குடிலில் அடங்குவார்களாயின், இதன் பெருமையைப் பற்றிச் சொல்லவேண்டுவதென்? என்பாலுள்ள பேரன்பால் இத்துணை நேரம் பன்மீன் நடுவட் பான்மதிபோல இங்கே வீற்றிருந்து என்னைப் பாராட்டி மகிழ்வித்த ராஜா அவர்களுக்கு யான் என்றுங் கடமைப் பட்டவன். இப் பேரவை கூட்டிச் சிறப்பித்த வரவேற்புக் கழகத்தார் எல்லோரும் எனக்கு இனிய நண்பராவர். இவர்கள் மனமுவந்து இச் செயலில் முற்பட்டுச் செய்த நன்மையை என்றும் நினைவு கூர்வேன். இன்று பேசிய திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள், திரு. S. S. பாரதியார் அவர்கள், திரு. T. P. மீனுட்சி சுந்தரனாரவர்கள் இம் மூவரும் என்பாலுள்ள அன்புமிகுதியால் என்னைப் பெரிதும் பாராட்டினார்கள். இவர்கள் என்னிடத்துக் கண்டனவாகக் கூறிய நலங்களெல்லாம் இவர்கள் உள்ளத்துட்டோன்றியனவேயாம். இவர்கள் தூய எண்ணங்களின் விளைவே என்னைப் பற்றி நிகழ்ந்தனவாம். மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபை, கரந்தைத் தமிழ்ச் சங்கம் முதலிய கழகங்களிலிருந்து படித்துதவிய வாழ்த்துப் பத்திரங்களும், புலவர் பெருமக்கள் படித்தளித்த வாழ்த்துக்களும், என்னிடத்து என்றுங் குறையாத பேரன்புடைய கனம் செட்டி நாட்டுக் குமார ராஜா அவர்கள், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்து வைஸ் சான்ஸ்லர் Sir K. V. ரெட்டி நாயுடுகாரு முதலியோர் அனுப்பிய வாழ்த்துத் தந்தி கடிதங்களும் என்னைப் பெரிதும் இன்புறுத்தின. என் இனிய நண்பர்களாகிய புலவர் பலர் வெளியூர்களிலிருந்து வாழ்த்துப் பாக்களும் பாராட்டுரைகளும் அனுப்பிச் சிறப்பித்தனர். இவர்கள் எல்லோருக்கும் யான் செய்யுங் கைம்மாறு யாதுளது? இவர்கள் அன்பை மறவாது என் வந்தனத்தைச் செலுத்துகின்றேன். மழை மிகுதியால் வழி நலம் இல்லாத இவ் வூர்க்கு வந்து இந் நன்ளில் என் சிறிய இல்லத்திற் கூடிக் காட்சியளித்த அன்பர்களுக்கும் என் வேண்டுகோளைப் பொருளாக ஏற்று விருந்து முதலியவற்றுட் குறைநேராமல் வந்தவர்களெல்லோரையும் உபசரித்து மகிழ்வித்த இவ் வூர் எம் மரபினராகிய அன்

புரிமை சான்ற நகரத்தாரவர்களுக்கும் என் வந்தனத்தை உளமாரச் செலுத்துகின்றேன். எனக்கு நல்வாழ்ப் பயனை யுறுவித்துப் பாதுகாத்துவரும் பேரருளாளராகிய சிவபெருமான் திருவடிகளை மனமொழி மெய்களால் நினைந்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

பாராட்டுக் கழகத்தாரின் சார்பாக, நற்சாந்து பட்டி திருவாளர் **பெ. ராம. ராம. சிதம்பரஞ் செட்டியார்** அவர்கள் பின்வருமாறு வந்தனம் கூறினர் :—

பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழாவைச் சிறப்பாகக் கொண்டாட வேண்டுமென்று எண்ணியதில், பொதுவாகத் தமிழ் நாட்டிலும் சிறப்பாகக் கல்வி உலகிலும் மிக்க புகழ்பெற்றவர்களாகவும், இம் மரபுக்கு ஒப்பற்ற தலைவர்களாகவும் உள்ள ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்களே பொருத்தம் என்று இக் கழகம் துணிந்தது.

அதன்மேல் அவர்களை நாங்கள் கேட்டுக்கொண்டபடி, அவர்கள் தங்களுக்கு இயல்பாக உள்ள பல அலுவல்களையும் பொருட்படுத்தாது எங்களையும், பண்டிதமணி அவர்களிடத்துள்ள அன்பையும் மதித்து இங்குத் தலைமை தாங்க இசைந்து வந்து, சிறப்பாக நடத்தி வைத்தார்கள். அவர்கட்கு இக் கழகத்தாராகிய யாங்கள் என்றும் மிக்க நன்றியறிதலுடையவர்களாக இருக்கின்றோம்.

பண்டிதமணியவர்கட்கு இவ்வாறு ஒரு விழா நடத்தும் பேறு எங்களுக்குக் கிடைத்தது பற்றி யாங்கள் மிகவும் மகிழ்ச்சி உடையவர்களாக இருக்கின்றோம். அவர்கள் தமிழுக்குச் செய்துள்ள தொண்டுகள் சொல்லும் அளவின அல்ல. அத்தகைய அவர்கள் இன்னும் பல்லாண்டு நல் வாழ்வுடன் வாழ்ந்திருக்கவும் யாங்கள் அவர்கட்கு நூற்றாண்டு விழா நடத்தும் பேறு பெறவும் இறைவனை வேண்டுகின்றோம்.

இங்குத் திரு. பண்டிதமணி அவர்களைப் பாராட்டிப் பேசிய திரு. அழ. சுப. பழ. சுப்பிரமணியன் செட்டியாரவர்களுக்கும், திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்களுக்கும், திரு. சோமசுந்தர பாரதியாரவர்களுக்கும், திரு. T. P.

மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுக்கும், வாழ்த்துரை எழுதி யனுப்பியவர்கட்கும், வாழ்த்துப் பாக்கள் பாடி இங்குப் படித்தவர்களுக்கும், இதுகாறும் அமைதியாக இருந்து சிறப்பித்த சபையோருக்கும் இக் கழகத்தாரின் சார்பாக நன்றியறிவைத் தெரிவித்து வந்தனஞ் செலுத்துகின்றேன்.

## கடிதம் அனுப்பியவர்கள் :

1. Sir K. V. ரெட்டி நாயுடுகாரு.
   (Vice Chancellor, Annamalai University.)
2. மஹாமஹோபாத்யாய Dr. வே. சாமிநாதையர் அவர்கள்.
3. ஸ்ரீமத். சிவஷண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள்.
4. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M.A., M.L.
   (Professor of Tamil, Annamalai University.)
5. மஹாவித்வான் பாஷாகவி சேகரர் ரா. இராகவையங்காரவர்கள்.
6. S. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள், B.A., L.T.
7. நாவலர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்.
8. திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள்.
9. C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள், B.A.
10. J. T. சதாசிவ ஐயரவர்கள்.
    (Inspector of Schools, Jaffna.)
11. Rao Sahib ஜ. குமாரசாமி பிள்ளையவர்கள், B.A.
12. ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள், B.A., B.L.
13. Rao Sahib S. வையாபுரிப் பிள்ளையவர்கள், B.A., B.L.
14. P. N. அப்புசாமி ஐயரவர்கள், B.A., B.L.
15. R. P. சேதுப் பிள்ளையவர்கள், B.A.. B.L.
16. N. விசுவநாதையரவர்கள், M.A., L.T.
    (Registrar, Annamalai University.)
17. C. பன்னிருகைப் பெருமாள் முதலியாரவர்கள், M.A., B.L.
18. பெருஞ்சொல் விளக்கனார் அ. மு. சரவண முதலியாரவர்கள்.
19. A. சிதம்பரநாதச் செட்டியாரவர்கள், M.A.

20. S. உருத்திரபதி யவர்கள், M.A.
21. R. விசுவநாதையரவர்கள், M.A., B.O.L.
22. S. பூவராகஞரவர்கள், B.A.
23. S. திருவேங்கட நயிஞரவர்கள், B.A., L.T.
24. சிவநேசன் இராமசாமிச் செட்டியாரவர்கள்.
25. T. P. நவநீதகிருஷ்ணனவர்கள், M.A.
26. V. செல்லப்பனவர்கள், M.A.
27.
28. வ. சுப்பையா பிள்ளையவர்கள்.
29. Rao Sahib மு. இராகவையங்காரவர்கள்.
30. வித்வான் ரா. இராமாநுஜ ஐயங்காரவர்கள்.
31. S. P. திருநெல்லை ஆச்சியவர்கள்.
32. E. T. சொக்கம்மாளவர்கள், B.A., B.L.
33. E. T. இராஜேசுவரி அம்மையாரவர்கள், M.A., L.T.
34. E. T. பத்மாவதி அம்மையாரவர்கள், M.A., L.T.
35. S. நடராஜ நாடாரவர்கள், BA,. B.L.
36. மு. நடேச முதலியாரவர்கள்.
37. சொ. முருகப்பா அவர்கள்.
38. அ. சேஷாத்திரி சர்மா அவர்கள்.
39. வித்வான் ச. சேது சுப்பிரமணிய பிள்ளையவர்கள்.
40. வித்வான் S. ஆறுமுக முதலியாரவர்கள், M.A., L.T., B.O.L.
41. "இந்திரா" ஆசிரியர்.
42. வித்வான் N. M. மாணிக்கம் அவர்கள்.
43. அ. கணபதிப் பிள்ளையவர்கள், B.A.
44. வ. ராம. இலக்குமணன் செட்டியாரவர்கள்.
45. V. ஷண்முகஞ் செட்டியாரவர்கள், B.A., B.L.
46. வித்வான் S. இராதாகிருஷ்ணனவர்கள்.
47. செ. சி. நா. இலக்குமணன் செட்டியாரவர்கள்.
48. T. M. சம்பந்தனவர்கள்.
49. N. V. இராமசுவாமி அவர்கள்.
50. சங்கீதபூஷணம் T. K. ரங்காச்சாரியவர்கள்.
51. லெ. ப. கரு. கருப்பன் செட்டியாரவர்கள்.
52. பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்கள்.
53. புத்தனேரி ரா. சுப்பிரமணியன் அவர்கள்.
54. பழ. மெ. சாமிநாதன் செட்டியாரவர்கள்.
55. தணிகையரசு அவர்கள்.

56. K. S. இராமச்சந்திரம் பிள்ளையவர்கள்.
57. சு. வீ. நா. நாச்சியப்ப செட்டியாரவர்கள்.
58. பாலாம்பாள் அம்மையாரவர்கள்.
59. விஜயலக்ஷ்மி அம்மையாரவர்கள்.
60. வித்வான் கோ. சி. பெரியசாமிப் பிள்ளையவர்கள்.

## தந்தி அனுப்பியவர்கள்:

1. குமார ராஜா Sir முத்தைய செட்டியார் அவர்கள் ழல
2. ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள், திருப்பனந்தாள் ஆதீனம்.
3. ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தரவர்கள் (இமயமலை மாயாவதியிலிருந்து).
4. J. T. சதாசிவ ஐயரவர்கள், யாழ்ப்பாணம்.
5. T. K. சிதம்பரநாத முதலியாரவர்கள், B.A., B.L. சென்னை.
6. நவநீதகிருஷ்ண பாரதியாரவர்கள், தெல்லிப்பழை.
7. வ. பழ. சா. பழ. சிதம்பரஞ் செட்டியாரவர்கள், கொளும்பு.
8. P. ஆலாலசுந்தரம் அவர்கள் M.A., தாம்பரம்.
9. திருவரங்கம் நீலாம்பிகை யம்மையாரவர்கள், திருநெல்வேலி.
10. செ. சி. நா. இலக்குமணன் செட்டியாரவர்கள், பசுமலை.
11. S. இரத்தினசாமிச் செட்டியாரவர்கள், சிதம்பரம்.
12. வித்வான் S. இராதாகிருஷ்ணன் அவர்கள், மாறு மதுரை.
13. சங்கரேசனவர்கள், பெல்லாரி.
14. அரு. தியாகராஜச் செட்டியாரவர்கள், கம்பளை.
15. ராம. பழனியப்ப செட்டியாரவர்கள், கம்பளை.
16. அசுவத்தாமன் அவர்கள், அண்ணாமலைநகர்.
17. நடராஜன் அவர்கள், தஞ்சை.

## COPY OF TELEGRAM

Thanks your kind letter. I was very much hoping to attend your sixty-first birthday celebrations. Regret inability attend. Am sure function would have been success. Tamilians and in particular our community can be proud of your services to the cause of Tamil. Wish you long life happiness to serve the cause of Tamil and the country.

(Sd.) KUMARARAJAH.

ADVAITA ASHRAMA Swamis send blessings best wishes.

(Sd.) VIPULANANDA.

## கடிதங்கள்:

SIR K. V. REDDI NAIDU GARU,
VICE CHANCELLOR.

*Annamalai University,*
*Annamalainagar,*
*7th October, 1941.*

Dear Mr. Subramaniam,

I thank you very much for your kind invitation to the celebrations in connection with the 61st Birthday of your dear father. I regret very much, however, that it will not be possible for me to leave the place, as the University reopens on the 13th instant. Let me, however, convey my best wishes for the long life, prosperity and happiness of your dear father, who had been a very much respected teacher in this University. His great scholarship in Tamil and his interest in the students have won for him a great fame. May God bless him.

Yours sincerely,
(Sd.) K. V. REDDI.

MAHAMAHOPADHYAYA
DAKSHINATYA KALANIDHI
Dr. V. SWAMINATHAIYAR

*Tiruvettiswaranpet,*
MADRAS.
10-10-1941.

செல்வச் சிரஞ்சீவி சுப்பிரமணிய செட்டியாருக்கு ஸ்ரீ. ஆனந்த நடராஜர் திருவருளால் எல்லா மங்களங்களும் மேன்மேலும் பெருக உண்டாகுக.

உபய க்ஷேமோபரி.

தாமும் தம்முடைய தம்பி சிரஞ்சீவி கனகசபாபதி செட்டியாரும் அனுப்பிய, தம்முடைய அருமைத் தந்தையாரது அறுபதாம் ஆண்டு நிறைவுச் சாந்தித் திருமண அழைப்புக் கிடைத்தது.

என்னுடைய அன்பரும், இயற்கையில் அமைந்த மதி நுட்பமும் வடமொழி தென்மொழி நூல்களை ஆழ்ந்து பயின்றதனால் அமைந்த பேரறிவும் வாய்ந்தவர்களும், மேலைச் சிவபுரி முதலிய இடங்களில் தமிழ்க் கலாசாலைகளை நிறுவிப் பாதுகாத்துத் தமிழ்க் கல்வி பரவும்படி செய்தவர்களும், செய்யுளும் வசனமும் எழுதுவதில் ஆற்றல் மிக்கவர்களும், கேட்போர் உள்ளம் கவரும் பிரசங்கங்கள் புரிபவர்களும், அண்ணாமலைச் சர்வ கலாசாலையில் தமிழ்த் துறைத் தலைவராக இருந்து தம் ஆராய்ச்சித் திறத்தையும் மதி வன்மையையும் வெளிப்படுத்தியவர்களுமாகிய தங்கள் அருமைத் தந்தையார் இன்னும் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்திருந்து தமிழின்பம் நுகர்ந்து தமிழ் நாட்டுக்குப் பயன்படும் தொண்டுகள் புரிந்துகொண்டு விளங்கும்படி செய்விக்கும் வண்ணம் ஸ்ரீ ஆனந்த நடராஜப் பெருமான் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

இங்ஙனம், அன்புள்ள:
(Sd.) வே. சாமிநாதையர்.

" தாங்கள் பல்லாண்டு சரீர சவுக்கியத்துடனும் ஏனைய நலன்களுடனும் வாழ்ந்து சமய உலகத்திற்கும் தமிழுலகத்திற்கும் பேருதவி செய்தல் வேண்டும் எனச் செந்தமிழ்க் குரவனை சேந்தப் பெருமானையும் அப் பெருமானது பாரங்கரமர் அன்னையரையும் இன்று இப் பகல் அருச்

திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள்.

உயர்திரு விபுலாநந்த அடிகள் எழுதியது:

மணிமலரிலே வெளிவந்த 'ஆங்கில வாணி' முடிபுரையிலே, 'ஆரியமும் தமிழும் வல்ல பண்டிதமணியா'ரெனச் சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைத் தொகுத்துக் கூறிய உரைத்தொடரினை நண்பர் சிலரது வேண்டு

கோளுக்கியைய விரித்துரைக்க விழைவுற்று இதனை எழுது கின்றோம்.

வேதம் ஆகமம் முதலிய எண்ணிறந்த பல்வேறு அறிவு நூற் பெருக்கங்களையுடைய வடமொழியும், தமிழ்மொழி யும் ஆகிய இருபெருமொழிக்கும் இலக்கண முடிபுகள் பல ஒன்றிவரலாலும், தமிழ்மொழிக்கு இலக்கணம் வகுத்த புலனழுக்கற்ற அறிவுடையோர் பலர் வடமொழி வல்லா ராய் அம் மொழி மரபு பலவற்றை எடுத்தாண்டமையாலும் தமிழிலக்கணப் புலமை நிரம்புதற்கு வடமொழியறிவும் ஒரு சார் வேண்டப்படுவதன்றோ? இக் காரணங்களினாலே ஆரிய மொழியினை விரும்பிக் கற்று அம்மொழியிலுள்ள சுக்கிரநீதி, மிருச்சகடிகம் முதலிய சிறந்த நூல்களைத் தூய தமிழில் மொழிபெயர்த்து அச்சியற்றி நல்கியதற்காகத் தமி ழுலகம் பண்டிதமணியாரைப் பாராட்டுகின்றது.

'ஆரியமும் தமிழும்' என ஆரியத்தை முதலிற் கூறியது இவரது தமிழ்ப் புலமையினை இரண்டாம்படியாக வைத்த தாகாதோவெனில், ஆகாது. "தமிழ்கண் மூன்றும் கொண்டாடி இளம் பூவைக் குழாம் தலைசாய்த்து உளமுருகும்" செந்தமிழ்ப் பாண்டிநாடு இவர் நாடாதலின், தமிழ்ப் புலமை இவர்க்குப் பிறப்புரிமையாயிற்று, ஆரியமொழிப் புலமை சிறப்புரிமையாயிற்று. சிறப்புரிமையை முதலிற் றந் துரைக்குமுகத்தான் 'ஆரியமும் தமிழும்' என வைத்தது பொருத்தமேயா மென்க.

'தமிழ் வல்லார்' என்றமையின், இவர் சொலல் வல்லார், கவிபுனைதல் வல்லார், நூலியற்றல் வல்லார், மாணவர்க்குத் தமிழறிவுறுத்தல் வல்லார் என இவரது பல திறத்தவாகிய ஆற்றல்கள் ஒருங்கு கூறப்பட்டன. இனித் 'தமிழ்' என்னு மிடத்து இயல், இசை, கூத்து என நின்ற மூன்றும், எழுத்துச் சொல் பொருள் யாப்பு அணியென நின்ற ஐந்தும், 'தமிழ் தழீஇய சாயலவர்' என்புழிப் போந்த இனிமையும் பெறப் படுதலின், இவர் தமிழ்த் துறை பலவினும் ஆய்ந்து கண்ட அரும்பொருண் முடிபுகளை, வேட்பத் தாஞ் சொல்லும் மாட்சியினரென்பது உய்த்துணர வைத்தமை காண்க.

அன்பும் அறிவும் நிரம்பி ஆண்டவன் படைத்த உயிர் களை ஏற்றத் தாழ்வாக நோக்காது ஒரு படித்தாகக் காண் போன் பண்டிதன் எனக் கண்ணபிரான் கீதையுள்ளே

கட்டளையிட்டமையின், ஆன்றோர் இவர்க்கு ஈந்த பண்டிதப் பெயர் இவர் அன்போடமைந்த அறிவுடையர் என்பதைத் தெளிவுபடுத்திற்று. திருவாசகத்திலும் ஏனைய திருமுறைகளிலும் இவரடைந்துள்ள புலமை வாளா அறிவு மாத்திரையோடமையாது அன்பு கலந்த நீர்மையதென்பது அறிஞரது துணிபு. பெரியோரிவரைப் ‘பண்டிதமணி’ என்றது,

“பொன்னுந் துகிரு முத்து மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினுந் தொடைபுணர்ந்து
அருவிலை நன்கல மமைக்குங் காலை
ஒருவழித் தோன்றி யாங்கு”

எனக் கண்ணகனார் கூறியபடி, இடைநிலம் படச் சேய்நிலத்தினராகிய தமிழ்ப் புலவர் பலர் ஒருங்கு கூடும் அவைக்களத்திலே அப் புலவர் பொன்னும் பவளமும் முத்தும்போன்று அவைக்களத்திற்கு அழகுதர, இவர் மணிபோல் ஒளிகாலும் நீர்மையினரென்பதைக் குறிப்பாலுணர்த்திற்று. மதிநுட்ப நூலோடுடையார் ஆழ்ந்து நோக்கி மேலும் பல நுண்பொருள் கண்டு களிகூர்வார் என்னும் உறுதியினாலே இவ்வளவில் முடிக்கின்றாம். விபுலாநந்தர்.

“உடம்பு ஒரு சிறிது முதுமை யுறினும் தங்கள் உள்ளம் இளமையும் எழிலும் உடையதாய் மிளிர்வதால் சாந்தியினால் முதுமைக் குறைகள் நீங்கப் பெற்று, திருமணத்தினால் மறுமலர்ச்சி எய்தி இன்னும் பல்லாண்டு ஆருயிர்த் துணைவியுடனும் அருமைப் புதல்வருடனும் இளமையும் வலிமையும் வளரப் பெற்று நல் வாழ்வும் நீண்ட ஆயுளும் உடையராய்த் திகழ அருள் செய்யும் வண்ணம் எல்லாம் வல்ல இறைவன் திருவடிப் போதினை இறைஞ்சுகின்றேன்.”

கா. சுப்பிரமணிய பிள்ளை.

“திருமண விழா இனிது நிறைவேற வேண்டும் என்றும், தமிழுலகிற்கொரு கண்மணி யனைய நந்தம் பண்டிதமணியவர்கள் இன்னும் பல்லாண்டு பல்லாண்டு எல்லா நலத்துடனும் வாழ்ந்து தமிழ்ப் பணியும் சிவப்பணியும் என்றும் போற் செய்து மகிழ்வுடன் திகழ வேண்டும் என்றும் மாதொரு பாகனை மனமார வழுத்துவேன்.

தன வைசியப் பெருமரபில் தோன்றி, தங்கள் பரம்பரைப் பெருநெறியாகிய சைவத்தில் உறைத்துத் தாம் நின்று வேறு பலரையும் நிற்கச் செய்து, வடமொழிப் புலமையும் தென்மொழிப் புலமையும் ஒருங்கு படைத்து, சிந்தைக்குஞ் செவிக்கும் இனிய தெளிதீந்தமிழில் சொன்மாரி பல பொழிந்து, அழகிய நற்றமிழில் அரியநூல் பல இயற்றி யளித்து, தமிழ்ப் புலவர் பலரை நல்கிப் புலவர் திலகமாய் விளங்கும் பண்டிதமணி யவர்கள் எம்போல்வார் எல்லோராலும் பெரிதும் போற்றப்படுபவர்கள்.

முதுபெரும் புலவராய் விளங்கும் அவர்கள் 60-ம் ஆண்டு விழாச் சமயத்துத் தமிழ்ப் பெருவள்ளலும் தமிழ்நாடெல்லாம் களிதுளும்பத் தமது 60-ம் ஆண்டு நிறைவைச் சமீபகாலத்தில் மாண்புறக் கொண்டாடிய பெரியாரும் ஆகிய செட்டிநாட்டரசரவர்கள் தலைமை தாங்கி நடத்துவது எவ்வகையாலும் பொருத்தமான பெரு நிகழ்ச்சியாகும்.

சென்னையிலும் இப் பெருவிழாவை நினைப்பூட்டும் நன் முறையில் ஏதேனும் செய்யவேண்டுமென்று நண்பர் சிலர் எண்ணியிருக்கின்றனர். அம் முயற்சி விரைவில் இனிது முற்றவேண்டும் என்னும் கருத்துண்டு."

ச. சச்சிதானந்தம் பிள்ளை.

N. VISWANATHA IYER, M.A., L.T., REGISTRAR.

*Annamalai University,*
*Annamalainagar,*
11th October, 1941.

My dear Pandithamani Avergal,

Let me congratulate you most heartily on this festive occasion. May I wish you and yours a long life enabling you to celebrate the Satabhishekam and the fulfilment of a hundred solar years as well. In wishing all this to you I am wishing the whole of Tamil Nad the benefit of your ripe Experience and mature Scholarship in both Sanskrit and Tamil. May there be many more Vidwans of your type and may you attempt to produce such a type be crowned with more and more of success.

Yours sincerely,
(Sd.) N. VISWANATHAN.

நாவலர், பண்டித, **ந. மு. வேங்கடசாமி நாட்டார்** அவர்கள் எழுதியது:

தமிழன்னையின் அருந்தவப் புதல்வராகிய முது பெரும் புலவர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள் தமிழ்ப் புலமைக்கு வரம்பாயுள்ளவர்; வடமொழிப் புலமையும் ஒருங்குடையவர்; வித்தகச் சொற்பொழிவாளர். 'ஆயிரத்தொன்றும் புலவர்' எனவும், 'வார்த்தை பதினாயிரத் தொருவர்' எனவும் ஓர் பழஞ் செய்யுள் கூறுகின்றது. ஆனால், நம் பண்டிதமணியோ புலவர் ஆயிரவரில் ஒருவர்; வார்த்தை வல்லார் பதினாயிரவரில் ஒருவர். **ஏனோர் அறிதற்கரிய நுண்பொருள்களை எடுத்துக்காட்டியும்,** நகைச்சுவை முதலிய தோன்றவும் பேசும் அவரது அரிய சொற்பொழிவைச் செவிமடுத்து இன்புற்றவர்கள் அதனை ஒருபோதும் மறத்தல் இயலாது. மற்றும், **செய்யுளியற்றல் உரையெழுதுதல் முதலிய புலமைக் கூறுகள் பலவும்** அவர்பாற் சிறந்து விளங்குகின்றன.

பண்டிதமணியவர்கள் தமது புலமையையும் செல்வாக்கையும் பயன்படுத்தித் தமிழ் வளர்ச்சிக்கு ஆற்றியிருக்கும் தொண்டு அளவிடற்பாலதன்று. மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபையைத் தோற்றுவித்து அதன் வளர்ச்சிக்கும் அரிய தொண்டுகட்கும் பற்றுக்கோடாயிருந்து, மற்றும் பல கழகங்களும் கல்விச்சாலைகளும் அந் நாட்டிலே தோன்றுதற்கு ஏதுவாயிருந்தமையை உணர்வோர் **தனவணிகர் நாட்டிலே தமிழ்க் கல்வி பரவுதற்கு விதை விதைத்தவர் பண்டிதமணியே** என்று கூறத் தயங்கார். தமிழ்ப்பணியில் ஈடுபட்டுள்ள கரந்தைத் தமிழ்ச் சங்கத்திற்கு அவர்கள் செய்தும் செய்வித்தும் வரும் உதவிகள் சாலச் சிறந்தன. மற்றும் நூல்களியற்றியும், சொற்பொழிவாற்றியும், மாணாக்கர்கட்குக் கல்வி கற்பித்தும், பொருளுதவி செய்வித்தும் பண்டிதமணியவர்கள் புரியும் கல்விக் கொடைக்கு, பல்கலைக் கழகம் தோற்றுவித்து வளர்த்தும், பல கலைகட்கும் பாதுகாப்பாளராயிருந்தும் புரந்து வரும் செட்டிநாட்டரசர் அவர்களது மாண்பொருட் கொடையையே ஒப்புச் சொல்லலாகும்.

கல்விச் செல்வரும் கற்றவர் நற்றுணையும் சிவனடிக் கன்பரும் ஆகிய இருமிக்க பண்டிதமணியவர்கட்கு இப்

பொழுது அறுபதாம் யாண்டு நிறைவெய்துவது தமிழன்பர் பலர்க்கும் அளவற்ற மகிழ்ச்சியை யளிப்பதாகும்.

பண்டிதமணி யவர்கள் வளஞ் சான்ற மகிழ்ச்சி மிக்க நல்வாழ்வுடன் இன்னும் பற்பல ஆண்டு திகழவேண்டு மெனத் தில்லை யம்பலவாணர் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

**ந. மு. வேங்கடசாமி நாட்டார்.**

சென்னை, திருவாளர் திரு. வி. கலியாணசுந்தர முதலியா ரவர்கள் எழுதியது.

பண்டிதமணி கதிரேசச் செட்டியாரை யான் நீண்ட நாளாக அறிவேன். இற்றைக்கு ஏறக்குறைய முப்ப தாண்டுக்கு முன்னர்த் தூத்துக்குடிச் சைவசித்தாந்த சபை யிலே, அவரை யான் கண்டு இன்புறும் பேறு எனக்கு வாய்த்தது. அப்பொழுது கதிரேசனார் தேனினும் இனிய திருவாசகத்தைப் பற்றி ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தி னார். அவர்தம் இளமைச் செழுமையும் தமிழ்ப் பொழிவின் கொழுமையும் என் உள்ளத்தைக் கவர்ந்தன. அக் கவர்ச்சி அவர்க்கும் எனக்கும் உற்ற நட்புக்குக் கால்கொண்டது.

பண்டிதர் கூட்டங்கள் ஈண்டியிருக்கும். அங்கே திரு. கதிரேசனார் புன்முறுவலுடன் போதருவார். போந்த சிறிது நேரத்தில் அவர் வான்மணியெனத் திகழ்ந்து ஒளி கால்வார். பண்டிதருள் திரு. செட்டியார் வான்மணியா யிலங்குவது கண்ட புலவர்கள் அவரைப் பண்டிதமணி யெனப் போற்ற லாயினர். பண்டிதமணிப் பண்பு, திரு. செட்டியார்க்குக் கருவில் அமைந்த திருவாகும்.

பண்டிதமணியின் புலமையில் பலதிறச் சிறப்புக்கள் உள்ளன. அவைகளுள் குறிக்கத்தக்கது ஒன்று. அது பாட்டின்ப நுகர்ச்சி.

திரு. செட்டியார் வாழும் ஊர் அமைதியுடையது; இயற்கையமைதி யுடையது. அமைதியுடைய ஊரில் அமைதி மிக்க தமிழ்க் கவிதையில் உறவு கொள்ளும் பேறு பண்டிதமணிக்குக் கிடைத்தது. இஃது அவர்தம் தவப் பயன் போலும்! அதனால் பண்டிதமணியின் மனம், தமிழ் வண்டாகிப் பாக்களாம் பூக்களில் படிந்து, இன்பத் தேன் நுகர்ந்து தன்னை மறக்கும் பயிற்சி பெறலாயிற்று.

செட்டியார் காவியங்களைப் பயிலுந்தொறும் பயிலுந்தொறும், பாவுள்ள இடங்களில் அவர் '**பாக்களுடன் இரண்டறக் கலப்பர்**' என்று யான் சொல்வது வழக்கம். பண்டிதமணி, புலவர் சூழலிலே அமர்ந்து, பாக்களிற் செறிந்து கிடக்கும் நுட்பங்களையும், வனப்புக்களையும் பிற வற்றையும் அகழ்ந்து அகழ்ந்து எடுத்துக் காட்டும்போது, அவர் அவைகளில் இரண்டறக் கலக்கும் இயல்பினரென்பது நன்கு விளங்கும்.

கதிரேசனார் காவியக் கடலில் மூழ்கி மூழ்கித் திளைத்துத் திளைத்து இருமை யற ஒன்றி ஒன்றி அக் காவியக் கடலான வர் என்று கூறல் மிகையாகாது. '**கதிரேசனார் காவியமானார்; காவியம் அவராயிற்று**' என்று கூறல் பொருந்தும்; சாலப் பொருந்தும்.

பொதுக் கூட்டங்களிலும் சிறப்பாகப் புலவர் ஈட்டங் களிலும் பண்டிதமணி தமது தமிழ் சொரிக்கும் நாவால் பாச் சொரிக்குந் திறங்களை வெளியிடும்போது, **அவர்தம் தோற்றம் ஒரு காவிய அருவி போலப் புலனாகும்.** வண்டின் யாழும், குயிலின் பாடலும், மயிலின் ஆடலும், அருவியின் முழவும் இன்ன பிறவும் ஒன்றி வழங்கும் இன்பத்தைச் செட்டியாரின் தமிழ்-பாத்தமிழ்-வழங்குதலைப் பாவாணர் புலன்கள் உணரும்.

கதிரேசனாரை ஒரு காவியப் பொழில் என்றுங் கூற லாம். அப் பொழிலில் தமிழ்ப் பறவைகள் புகுந்து பல திறக் கனிகளின் சுவை நுகர்ந்து இன்புறுவதுண்டு. கதிரேசனார் கூட்டங்களில் நுழையும் வேளையில் '**காவியம் வருகிறது**' என்று அறிஞர் பேசுவதை யான் கேட்டுள்ளேன்.

பண்டிதமணியினிடம் நிருவாகத் திறனும் அமைந் திருத்தல் ஒருவித வியப்பு. இப்பொழுது மூன்று பல்கலைக் கழகங்களின் தமிழ்க் கிளைகளில் திரு. செட்டியார் தலைமை தாங்கி, வினைகளைத் திறம்பட ஆற்றிவருவது கண்டுக் குறிக்கற்பாலது.

சில கூட்டங்களில் திரு. கதிரேசனாரைப் பற்றி யான் பேச நேர்ந்தபோது, "**தமிழ் நாடு தன்னாட்சி பெறுங்கால் தமிழ்க்கலை செட்டியாரை ஓர் அமைச்சராக்கி மகிழ்வுறும்.**" என்று சொல்லியுள்ளேன். என் சொல் செயலில் நிகழுங்

காலத்தை எல்லாம் வல்ல இறைவன் அணிமை யாக்குவாராக.

பண்டிதமணி கதிரேசச் செட்டியாரின் மணிவிழா தமிழன்னைக்குக் கழிபேருவகை ஊட்டாநிற்கிறது. அத் திருவிழா நாடெங்கும் நடைபெறுவதாக.

பண்டிதமணி நீடு வாழ்க! தமிழ் வெல்க!

திரு. வி. க.

**அன்பு நிறைந்த அறிஞர் பெரும**

"ஆன்ற புலமையும் ஆற்றலும் அன்புக் குணமும் நிறையப் பெற்ற தாங்கள் அறுபதுயாண்டு நிறையப் பெற்று விளங்கும் இந்நாளில் தங்களுக்குச் சுப மங்கள வாழ்த்துக் கூறுகின்றேன். தங்கள் நாமம் தமிழகத்தில் எங்கும் அறியப் பட்டுள்ளது. தமிழ்க்கலை வளர்ச்சியைத் தாங்கி நிற்கும் கலாதுரந்தரர்களுள் தாங்கள் முன்னணியில் நிற்பவர் என்பது தமிழர்களது நம்பிக்கை. தாங்கள் இன்னும் பல்லாண்டு பல்லாண்டு நோயற்ற வாழ்வு வாழ்ந்து தமிழ்த் தெய்வத் திருத்தொண்டு செய்து விளங்கி யிருக்கத் திருவருள் பாலிக்குமாறு செந்தமிழ்ப் பரமாசாரியன் திருவடிகளைச் சிந்தித்து வந்திக்கின்றேன்

"யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தார் தங்களுக்கு நன்றியறிதலோடு வாழ்த்துக் கூறு கின்றனர். தாங்கள் இச் சங்கத்து விஷயத்தில் காட்டி வரும் அன்பையும் அபிமானத்தையும் நினைந்து தங்கள் நன்றி யைப் பாராட்டித் தங்களுக்கு யா. ஆ. தி. பா. சங்கம் மங்கல வாழ்த்துக் கூறுவதை இதனால் தங்களுக்குத் தெரியப் படுத்திக்கொள்கின்றேன்."

தி. சதாசிவ ஐயர்,
(District Educational Officer, Jaffna.)

"எனது பேராசிரியரும் தங்கள் தந்தையாருமாகிய பண்டிதமணியவர்கட்கு எனது மனமார்ந்த வணக்கங்களைக் கூறுங்கள். அவர்களுடைய நீண்ட நல்வாழ்விற்காக ஆண்டவனை வேண்டுகின்றேன்."

"உயர்ந்தோர் மதிக்கும் பேறுகள் எல்லாம் சிறக்கப் பெற்று, தமிழகத்தின் கதியாக விளங்கும் தண்டமிழாசான், பண்டிதமணியவர்கள் பல்லாண்டு வாழ்ந்து, தேமதுரத் தமிழொலியை எங்கும் பரப்பும் வண்ணம் வளரொளிப் பெருமான் திருவருள் புரிக."

ரா. பி. சேதுப் பிள்ளை.

"சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும் உறைவான் உயர் மதிற் கூடலின் ஆய்ந்த ஒண் டீந்தமிழ்த் துறையினும், வடமொழித் துறையினும் வல்ல தமிழ்ப் பேரறிஞராகிய தாங்கள், எல்லா வின்பங்களும் நிறைவுறப் பெற்றுத் தமிழ்த் தொண்டு செய்து பல்லாண்டு வாழ்கவென வாழ்த்துகின்றேன்."

ஐ. குமாரசாமி பிள்ளை.

சென்னைச் சைவ சித்தாந்தப் பெருங் கழகத்து அமைச்சர் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் B.A., B.L., எழுதியது.

சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்; சிரிப்பும் களிப்பும் தேனிப்பும் எல்லோருக்கும் வரமாட்டா. உள்ளங் குளிர்ந்து உவகை யெய்திப் பூரித்தாலன்றி உண்மையான சிரிப்பும் களிப்புமில்லை. நிரம்பிய புலமையும், மெய்யன்பும், உள்ளுணர்வும், புரவலரை நாடிச் சென்றடையாத திருவும், அமரருள் உய்க்கும் அடக்கமும் வாய்க்கப் பெற்ற ஒருவருடைய உள்ளமே வெதும்புதலின்றி எஞ்ஞான்றும் குளிர்ந்திருக்கும்; இயல்பாகவே பூரிக்கும் தன்மையுடையதா யிருக்கும். அத்தகைய குளிர்ந்த உள்ள முடையவர்கள் ஒரு சிலரே இப்போது இத் தமிழ் நாட்டிலுள்ளார். அவர்களுள் ஒருவர் நம் பண்டிதமணி கதிரேசனாரவர்கள்.

பண்டிதமணி யவர்களை நான் முதன்முதலாகப் பார்க்க நேர்ந்து ஒரு வியாழ வட்ட மாகின்றது. என்னைக் காணு முன்னரே என்னுடைய விருந்தினராக இருக்க ஒப்புக் கொண்டு உருத்தெரியாக் காலத்தே என்னுளமன்னித் தமது அன்பினைப் பண்டிதமணி யவர்கள் வெளிப்படுத்தினார்கள். பக்ஷமுடன் ஒரு பக்ஷம் என்னில்லத்தி லிருந்து, ஒருவர் ஒருவ

ரிற் கலந்த அன்பினராய் உடனுறைவின் பயனளித்துத், திரண்டு திரண்டு இறைவன் திருவார்த்தை பேசுவார் மெச்சுவார் சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திருக்கூட்டத்தில் தாம் தலைமை வகித்து, என்னையும் ஒருவனுக்கிய நன்றியை நான் என்றும் மறக்கவொண்ணுது.

கதிரேசனுர் எங்கே யிருப்பினும் அங்கே தமிழ்க் கதிரும் சைவக் கதிரும் ஒளிப் பிரவை வீசி நிற்கும். புலவர் பலர் விண்மீன் போலச் சூழ்ந்திருப்பத் தாம் சித்திரைச் சித்திரைத் திங்களே போல் ஒட்பமும் நட்பமும் ஒருங்கே பொருந்த வீற்றிருப்பர் நம் கதிரேசனுர். கதிரேசனுர் தலைமை தாங்காத கழகம் இத் தமிழ் நாட்டி லில்லை. தாம் போந்த பேரவைக்கண் தாமே பிரகாசிப்பர்; தம்மையின்றி அப் பேரவைக்குப் பெருமையும் இன்ருகும். அவைக் களத்துள் ஒரு புலவர் ஏதேனும் ஒரு பொருள் பற்றிய ஆராய்ச்சியை நிகழ்த்துவர். தலைவர் வாக்கிறந்த பூரணராய்க் கடிகாரத்தைப் பார்த்தவண்ணமா யிருப்பர். அவைக்களத்துக்குச் சிறிது அண்மையிலும் சேய்மையிலும் உள்ள ஓரிடத்தில், பண்டிதமணி யவர்கள் தலைமையில், சிரிப்பார், களிப்பார் சிறு கூட்டமொன்று இடைவிடாது நடந்து கொண்டே யிருக்கும். பேரவையி லுள்ளோர் ஆராய்ச்சிக் கரும்பைக் கடித்துக் கடித்துச் சுவைக்க முயல்வர்; பண்டிதமணி அவர்களின் சிற்றவையினரோ இலக்கியத் தேனைச் சுவைத்துச் சுவைத்துச் செம்மாந்திருப்பர்.

திருவாசகத்தைப் பண்டிதமணி யவர்கள் சுவைத்தறிந்தனுபவிப்பதுபோல வேறு எத் தமிழறிஞரும் செய்யக் கண்டிலேம். திருவாசகத்தைத் தேன் என்ற காரணம் இன்னதென்பது முதலாகப் பால் நினைந்தூட்டும் என்ற பாட்டிலுள்ள ஒவ்வொரு சொல்லினின்றும் ஊற்றெடுத்தோடும் தேன் வெள்ளப் பெருக்கீருகவுள்ள மாணிக்க வாசகங்களை விளக்குந்தோறும் கேட்போர் உள்ளம் பூரிக்கும், இன்பக் கடலில் திளைக்கும்; இறைவன் திருவடி நினைவிற் கூடும்.

ஐய நூல்களைச் சமயக் கண் கொண்டும் சமய நூல்களை இலக்கியக் கண் கொண்டும் பார்த்தின்புறும் தனிப் பேராற்றல் பண்டிதமணி யவர்கட்கு உண்டு. கேவலம் இலக்கியச் சுவையை மட்டும் நுகர்ந்து வந்த நூற்றுக்

கணக்கான இளைஞர்கட்கு இலக்கிய நூல்களிலுள்ள சமய நுட்பங்களையும் உண்மைகளையும் எடுத்துக் கூறி அவ்விளைஞர்களைச் சமய நெறிப் படுத்தியும், சமய நூல்களைக் கேவலம் சமய நூல்களென்று ஒதுக்க வேண்டா; அவற்றுள் இலக்கிய முத்துக்கள் குவியல் குவியலாகக் கிடக்கின்றன என்று முத்துக் குளிப்பார் போல நுழைந்து அவ் விளைஞர்களை ஈர்த்துச் சமய நூல்களையும் படிக்கும்படி தூண்டியும் அருந்தொண்டாற்றிவரும் பண்டிதமணியவர்கட்குத் தமிழ் நாடும் சைவ உலகும் செய்யும் கைம்மாறு யாதுளது?

சொற்பொழிவுகள் நிகழ்த்துங்கால் பண்டிதமணியவர்களுடைய ஆன்ற புலமையும் அவையறிந்துரைக்கும் திறமையும் நன்கு வெளிப்படும். அவையினருக்கு நகைச்சுவையூட்டும் வழிகள் அறிவாளிகட்கு அருவருப்பு ஒரு சிறிதும் தோன்றாத தூய்மையுடையனவாகவே யிருக்கும். வால் வாங்கமாட்டாது விழிக்கும் வச்சத்தொள்ளாயிரத்து நரி, அரை வேக்காட்டில் ஆரவாரித்து முழுவதும் வெந்து பக்குவமானபோது ஓசையற்றிருக்கும் இராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய பக்ஷண உபதேசம் முதலியவற்றைப் பற்றிப் பண்டிதமணியவர்கள் கூறுவதைக் கேட்டோர் அவற்றை என்றென்றும் மறக்க முடியாது. வேறொருவர் கொள்கையைத் தாம் கண்டிக்க நேரிடின், வெகு ருசிகரமான முறையில் நாகரிகமாகக் கண்டிப்பதை அவைக்களத்தோர் கண்டு மகிழ்வர். இம்முறையில் இவர்கட் கொப்பாகத் திருக்கோவலூராதீனத்து உயர்திரு ஞானியாரடிகளையே கூறலாம். உண்மையை உள்ளவாறே கூறுவதில் எவ்வித இடர்ப்பாடு நேரினும் அதைப் பொருட்படுத்தாது சாதிக்கும் அஞ்சாமை பண்டிதமணியவர்களிடம் உண்டு. சில ஆண்டுகட்கு முன்பு, கரந்தைத் தமிழ்ச்சங்க ஆண்டு விழாவில் நிகழ்ந்த நாட்டார் நகரத்தார் சொற்போரின் முடிவே இதற்குச் சான்றாகும். இதனை அறிஞர்கள் நினைக்குந்தோறும் உவகை பொங்கும்.

காவிய ரசத்தை யனுபவிப்பதில் இருமொழிப் புலமை ஒரு சிறந்த சாதனமாகும். ஒரு சந்தர்ப்பத்தை வேறு வேறு மொழிகளிலுள்ள காவியங்கள் எவ்வெவ்வாறு வருணித்துள்ளன என்பதை ஒப்பிட்டறிந்தால் புலவர்களின் ஏற்றத் தாழ்வு நன்கு விளங்கும். பண்டிதமணியவர்கட்கு வடமொழிக் காவியங்களில் நிரம்பிய பயிற்சியுள்ளபடியால்,

சேக்கிழாரும் கம்பரும் உரையாசிரியர் முதலியவரும் இளங்கோவடிகளும் எவ்வெவ்விடங்களில் காளிதாசராதிய வடமொழிப் புலவர்களைவிட மேம்பட்டுள்ளார்களென்பதை அவர்கள் விளக்கும்போது ஆரியங் கற்றுத் துறைபோகிய சிரோமணிகளுள் எவரும் அவர்களை மறுக்க இயலாது. சேக்கிழாரை இழித்தும் கம்பரை உயர்த்தியுங் கூறும் வெறியாளர்களைப் பண்டிதமணியவர்கள் தலைகுனியச் செய்வதுண்டு. பண்டிதமணியவர்களுடைய வடமொழிப் புலமை **சுக்கிர நீதி, மண்ணியல் சிறுதேர்** முதலிய மொழிபெயர்ப்புக்களாலும் உரைநடைப் பெருமை **சுலோசனை, உரைநடைக்கோவை** முதலிய வெளியீடுகளாலும் நன்கு புலனாகும்.

இப் பெரியாருடைய அறுபதாவது ஆண்டு நிறைவு விழாவில் என்னையும் இக் கட்டுரையின் மூலம் கலந்து கொள்ளுமாறு பணித்த அன்பர்கட்கு எனது நன்றியைச் செலுத்துகின்றேன். பண்டிதமணி பல்லாண்டு பல்லாண்டு வாழி; கதிரேசனார் கற்ப கோடி காலம் வாழி.

மதுரை அமெரிக்கன் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்
**ஆ. கார்மேகக் கோனாரவர்கள்** எழுதியது.

திருவாளர் பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரவர்களது அறுபதாம் ஆண்டு நிறைவு விழாக் கொண்டாட்டம் அண்மையில் நிகழ விருப்பதையறியத், தமிழ்மக்கள் அனைவரும் கழிபேருவகை பூப்பர் என்பதிற் சிறிதும் ஐயமில்லை.

ஈண்டிய சிறப்பிற் பாண்டியராயினார் தம் பழவிறல் மூதூர்களிலே பண்டைநாளில் நிறுவிய சங்கங்களிலிருந்து தமிழாராய்ந்த நல்லிசைப் புலவர் பல்லாயிரவர் பல்கி வாழ்ந்திருந்த தமிழகத்தில், அத்தகைய புலவர் பெருமக்களைக் காண்பதே அருகிப்போன இக்காலத்தில், நம் பண்டிதமணி போன்ற புலவர் ஒரு சிலரேனும் வாழ்ந்திருப்பது தமிழ் மக்கள் செய்த தவப் பயனே யென்று சொல்லலாம்.

பண்டிதமணியவர்கள், தம் மரபிற்குரிய வாணிகத்துறையில் புகுந்த இளம் பருவத்திலேயே தமிழ்ப் புலமையில் வேணவாவுற்று அதனையடைய முயன்று தமிழ்மொழியிலுள்ள நூல்களையெல்லாம் வரன்முறையாய்த் துகளறக் கற்றுச் சீரிய புலமையுற்றோராவர். அன்றியும் “ஒரு மொழிப்

புலமையுடையோர் ஒரு சிறைப் பறவையே" என ஓர் ஆங்கிலக் கவிஞர் கூறியுள்ளபடி உளதாம் குறை நீங்க வட மொழியிலுள்ள நாடக காப்பிய வியாகரணங்களையும் நனி வரக் கற்று வடமொழிப் புலமையும் சாலப் படைத்தோ ராவர். இப் புலமைத் திறத்தினாலேயே இவர் கம்பர், சேக்கி ழார் முதலிய தமிழ்ப்பெரும் புலவர்களது செய்யுள் நயங் களை வடமொழிக் கவிஞராகிய காளிதாசன், பாசன் முதலி யோரது செய்யுள் நயங்களோடு ஒப்பிட்டுச் சீர்தூக்கிக் காட்டிப் பேரவையினரை மகிழ்விக்கும் மதுகை படைத்த வராயும் திகழ்கின்றனர்.

இவ்விருமொழிப் புலத்தாலேயே பண்டிதமணியவர்கள் சுக்கிரநீதி, மிருச்சகடிகை, உதயணன் சரிதை என்ற வட மொழி நூல்களைத் தமிழ்மொழியிற் பெயர்த்துதவித் தமிழ் மொழிக்குப் புதிய நூற் செல்வமும் ஈட்டியளித்த வணிகர் குலமணியாவர். இந் நூல்களால் இவர்களது மொழிபெயர்க் குந் திறனும், உரை நடை வன்மையும்; கவிபாடுந் திருவும் நன்கு அறியக் கிடக்கின்றன.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ் நாட் டில் தமிழ்மொழி யிருந்த நிலையினையும், இப்போதிருக்கும் நிலையினையும் நினைவு கூர்ந்தால் இக்காலத்தில் தமிழ்மொழி எல்லாத் துறைகளிலும் எத்துணையோ பெருகியுளதெனத் தெற்றெனத் தெளியலாம்.

இக்காலத்துத் தமிழ் மக்களுள் ஒருசிலர் நன்கு உரை நடை எழுதும் பயிற்சியும் பேசுந் திறனும், தாய்மொழிப் பற்றும், நூல் வெளியிடுந் திறனும் உற்றுத் தமிழ்வளஞ் சான்று விளங்குகின்றனர். இவற்றிற்கெல்லாம் காரணம் யாதெனில் இற்றைக்கு 40 ஆண்டுகளுக்கு முன்னர்ப் பீடு மிக்க மாடமதுரையில் பாற்கர சேதுபதி மன்னரும், பாண்டித்துரைக் கோமானும் சேர்ந்து நாட்டிய மதுரைத் தமிழ்ச் சங்கமும், கரந்தையில் இராதாகிருட்டின பிள்ளை யவர்களால் நிறுவப்பெற்றுப் பின்னர் அவர்தம் அண்ணல் தமிழ்ப் புரவலர் உமாமகேசுவரம் பிள்ளையவர்களால் புரக் கப்பெறும் கரந்தைத் தமிழ்ச் சங்கமும், தமிழ் நாட்டில் பிற்றைநாளில் ஆங்காங்குப் புதிதாகத் தோன்றியுள்ள பிற சங்கங்களுமாம் எனில் அது தவறாகாது. இச் சங்கங் களுள் மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபை முதலிய செட்டி

நாட்டுச் சங்கங்கள் பலவும், நம் பண்டிதமணியவர்களது உலையா முயற்சித் திறத்தினலேயே தோன்றினவென்றல், அப்பொழுது, இக்காலத்தில் புதிதாக உண்டாய தமிழ் வளர்ச்சியில் நம் பண்டிதமணியவர்களுக்கு எத்துணைப் பங்கு உண்டென்பது நன்கு தேறப்படும். இதனல் இவர்களது புலமை, தாமின்புறவும், உலகின்புறவும் ஆயதோடமையாது தமிழ் மொழியின் வளர்ச்சி நெறிக்கண்ணும் எத்துணைப் பயன்பட்டுளதென்பது நன்கு உணரப்படும்.

பண்டிதமணியவர்கள் சொற்பெருக்காற்றி மகிழ்விக்காத சங்கங்களே தமிழ் நாட்டில் ஒன்றும் இல்லை யென்னலாம். இதனல் இவர்களது புலமைப் பொன்மலர் நறுமணமும் பெற்று விளங்குவதாயிற்று. சில வருடங்கட்கு முன்னர்த் திகழ்ந்திருந்த பாற்கர சேதுபதி, பாண்டித்துரைத் தேவர், சோமசுந்தர நாயகர் என்னும் இப் பேரறிஞர்கள் ஒரு செய்யுளையே அடிப்படையாக வைத்துக்கொண்டு பல மணி நேரம் வரை சொற்பெருக்காற்றிக் கேட்டாரைப் பிணிப்பர் என்னும் செய்தி அறிஞர்கள் பலரும் நன்கு அறிந்ததே. அத்தகைய சொற்றிறன் படைத்தோர் அரிதாய இக்காலத்துப் பண்டிதமணியவர்கள் அத் திறனேடு விளங்குவது அவர்களது புலமையின் சிறப்பியல்பைக் குறிக்கும். சுருங்கக்கூறின் இப்புலவர் பெருந்தகை கவியியற்றல், உரைகாண்டல், சொற்பொழிவாற்றல், உரைநடை வகுத்தல், நூலறிவுறுத்தல், நூலாராய்ச்சி முதலிய பல்புலத்துறையும் முற்றிய வீறுசால் பெருமையாளர் என்னலாம்.

இப் பெரியார் தம் மரபிற்குரிய வணிகத்துறை முயற்சியை அறவே யொழித்துவிட்டுத் தமிழ்ப்பணியில் ஆரா வேட்கையுடையராய், சில்லாண்டுகட்கு முன்னர்த் தில்லையம்பதியில் ராஜா. சர். அண்ணமலைச் செட்டியாரென்னும் மாபெரும் வள்ளலார் நாட்டிய அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராய் வீற்றிருந்து மாணவர்களுக்கு உயரிய தமிழ் நூல் அறிவுறுத்தும் வினையுடையோராய் இருந்து வருவது தமிழ் மக்கள் யாவராலும் நன்கு போற்றற்குரிய செயலாகும்.

இத் தமிழ் நாவலர், "உலகத்தோ டொட்ட வொழுகல் பல கற்றும், கல்லா ரறிவிலாதார்" என்னும் வள்ளுவப்

பெருந்தகையினது வாய்மொழியை நன்கு தெருண்டோராத லால், இக்காலத்துப் பண்டிதர்களுக்கு உலகியலறிவு குறை வெனக் கூறும் ஒரு சிலர், தம் போலி அறிவினின்றும் தெருளுதற்குச் சான்ருய், இலகு நூலறிவோடு உலகியலறி வும் ஒருங்கு படைத்து விளங்குவது இக்காலத்துப் புலவர் உலகிற்குத் தனிப்பெரும் சிறப்பாகும். இத் தன்மை யெல் லாம் கைவரப் பெற்றமையால் இவர்கள் ஆங்கில அறிவுடை உத்தியோகத்தர்களிடையிலும், பிரபுக்கள் நடுவிலும், பொதுமக்கள் குழுவிலும், புலவர் நாப்பணிலும் நன்கு பழகி அளவளாவும் பெற்றியுடன் இலங்குகின்றனர்.

நம் செட்டியாரவர்கள் பேரவைகளிற் றலைமைபூணுங் கால் பிறர் கூற்றை மறுத்துரைக்கும் அமையம் நேர்ந்த விடத்தும் அதனைக் கடுஞ் சொல்லால் அன்றிக் குறிப்பாக நகைச்சுவை ததும்ப இன்சொலால் கூறும் சதுரப்பாடு புலவர் அகங்களையெல்லாம் பிணித்துள்ளது. இவர் கள் எப்போதும் பன்மீன் நாப்பண் பான்மதிபோலப் புலவர் குழுஉச் சூழவிருக்க இருந்து தமிழ்க்கவி நயங்களைப் பற்றிச் சல்லாபித்து அருங்கலை விநோதராய் இருப்பதி லேயே பேரார்வம் பூண்டவர். நான் மதுரைத் தமிழ்ச் சங்கத்துக் கல்வி பயின்று வெளியேறிய 1912-ஆம் வருட முதல் இதுவரை இருபத்தெட்டு வருடங்களாக இவரது அன்பிற்கும், நண்பிற்கும் கெழுதகைமையுடையோ ஞக இருப்பது என் வாழ்க்கையில் எற்குச் சிறந்ததோர் பெருமிதம் பயப்பதாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தி லும், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலும் உள்ள தமிழ்க் கழகங்களில் பண்டிதமணியவர்களுடன் உறுப்பினருய் அமர்ந்து செயலாற்றி அவர்களது நண்பின் இன்பினை நுகர்தற்கு அடிக்கடி எனக்கு அமையம் வாய்த்தது எற்குப் பெருமகிழ்வளித்து வருகிறது. இன்னும் என்னுல் எடுத் துரைக்க இயலாத சால்புகள் எத்துணையோ இவர்கள்பால் உள்ளன. இயன்றவாறு ஈண்டு இயம்பினேன். "நல்லார் குணங்கள் உரைப்பதுவும் நன்றே" என்றவாறு இன்று இவர்கள் குணங்களுரைக்கும் நற்பணி எற்குக் கிட்டியது பெறலரும் பேருகும்.

இந் நல்லிசைப் புலவர் சொல்லிசை மிகுத்து இவ் அறுபதாம் ஆண்டுடன் இன்னும் நாள்கள், வையை எக்கர்

மணவினும் பலவாய்ப் பல்கி, உடல் வலியும், உரன் வலியும் உற்று மற்றும் பல நலங்களும் பெற்று இனிது வாழவும் இவர்களது ஆண்டுவிழாச் சிறப்புடன் நிகழவும் தமிழ்த் தெய்வத்தின் திருவருளை எண்ணி வழுத்துவோமாக.

திருப்பதி கீழ்நாட்டுக் கலை ஆராய்ச்சிப் ப ச சொற் பொழிவாளர் திருவாளர் T. P. ப்ப பிள்ளை அவர்கள் B.O.L., எழுதியவை :

இருபத்தேழு ஆண்டுகட்கு முன்பு திருச்சிராப்பள்ளி நேஷனல் கல்லூரியில் யான் பள்ளிப் பிள்ளையாகப் பயி லுங் காலத்து என் ஆசிரியர் ஸ்ரீ. உ. வே. சடகோப ராமா நுஜாசாரியாரவர்கள் மஹாமஹோபாத்யாய Dr. வே. சாமி நாதையரவர்களையும பண்டிதமணி மு. கதிரேசச் செட் டியாரவர்களையும் என் கலாசாலைக்கு அழைத்து "இவர்கள் தாம் நம் தமிழகத்துப் பெரும் புலமையாளர்கள்" என்று தனித்து மகிழ்வுடன் கூறிவிட்டு அளவளாவிக்கொண் டிருந்தனர். இதுவே எனக்கு முதற் காட்சி.

பின்னர் அந் நகரிற் பல யாண்டுகளில் திரு. மு. கதிரே சச் செட்டியாரவர்களைப் பார்க்கவும் அவர்களுடைய அரிய பெரிய சொற்பொழிவுகளைக் கேட்டுப் பயனெய்தவும் நேர்ந்த நிகழ்ச்சிகள் பல. இவர்கள் அந்நகர்ப் பொது மன்றத்தில் மணிமேகலைக் காப்பியத்திறன் பற்றியும், மலைக் கோட்டைச் சைவ சபைச் சார்பில் கண்ணப்பர் சரித விரு ஞானார்த்தம் பற்றியும், நாற்றுக்கான் மண்டபத்தில் திரு வாசகம் பற்றியும் சொற்பொழிவாற்றியபோது அரிய பெரிய பொருள்களை நுண்ணிய திண்ணிய முறையால் விரித் துரைக்கக் கருத்தூன்றிக் கேட்டுப் பயன்பெற்ற போதெல் லாம் இவர்கள்பால் எனக்கு இறும்பூது சான்ற ஏத்துளப் பாங்கே என்றும் மிகுந்து தோன்றியது. அக் காலங்களில் இவர்கள், புலமைப் பெருந்தகையாளர்களாகிய திருவாளர் பா. வே. மாணிக்க நாயக்கரவர்கள், பண்டித ந. மு. வேங் கடசாமி நாட்டாரவர்கள் முதலிய பெரியார்களுட னுறைவு பெற்றிருந்தகாலை என் உள்ளத்தில் இவர்கள் தேர்ந்த புல மையும், செஞ்சொற்றிறனும், நுண்பொருள் தெருட்டும் தோன்மையும் மாண்பும் எண்ணுந்தோறும் இன்பூற்றுகவே இருக்கவே. இதனால் இவர்களை யடைந்து தமிழ்க் கல்வி

யூற்றம் பெறல்வேண்டுமென்று என்னுள்ளத்தில் பலகால் எண்ணங்கள் வலுப்பெற் றெழுந்தன ; ஆயினும் கிட்டாமை என் தவக் குறையே !

பின்னர் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் யான் தமிழ் ஆசிரியப் பணி மேற்கொண்ட சின்னுட்குப் பின்னர், இவர்கள் அப் பல்கலைக் கழகத்தின் சார்பில் நான்கு பேருரைகள் நிகழ்த்தற் பொருட்டு எழுந்தருளினார்கள். அப்போது பெருங் கவிஞராகிய கம்பர், நறுங் கவிஞராகிய இளங்கோவடிகள், அருங் கவிஞராகிய சேக்கிழார், அருட் கவிஞராகிய மணிவாசகர் ஆகிய நான்கு தமிழ்ப் பெரியார் களின் செம்மை சால் திறங்களை எம்மனோ ரெல்லாம் தெளியுமாறு தெருட்டிக் காட்டினார்கள். அங்கு ஆசிரியர் கள் பெருங் குழுவில் இவர்கள் இருமொழிப் புலமையும், பெருமொழித் திறனும், நுண்பொரு ளுணர்ச்சியும், சங்கத வாணர், அங்கிலவாணர் முதலியோரால் பண்பெறப் பாராட்டப்பட்டது எளியேன் உளத்தே என்றும் நிலை பெறும்.

பின்னர் 1934-ம் ஆண்டில் இவர்கள் அண்ணுமலைப் பல் கலைக் கழகத்தில் தமிழ் விரிவுரையாளராய்ச் சிறந்த பதவி பெற்று அமர்ந்த காலை இவர்கள் ஏனைத் தமிழாசிரியர்க ளோடு கலந்து பழகிய பண்பும் நண்பும், மாணுக்கர் குழுவில் இவர்கள் பெரும் பாராட்டாக என்றும் பெற்ற ஏத்தும் போற்றும், அவைக்களங்களில் இவர்கள் சொற்பொழி வாற்றும்போதெல்லாம் அவையிடை மலர்ந்த புகழ்ச்சியும் பலர் வழிபாட்டு நிகழ்ச்சியும், அறிஞர் குழுவில் இகலிலராய் எஃகுடையராய்ச் சொல்லாடுங்கால் நயனும் பயனும் நவை யில் நகைச் சுவையொடு விளைய இன்னுரை கூறும் ஏற்றமும் தோற்றமும் என் உளத்தில் என்றும் ஒளிரும் ஓவியவுரு வொத்துள்ளன. இவர்கள் கற்றுத் துறைபோய் முற்றிய புலமையாளராயினும் அன்றன்றுரைதரூஉம் அருநூற் கடலுட் சென்று திளைத்தாடித் தெவிட்ட உட்கொண்டு கன்றெனை மருவிக் கலைபயில் மாணவர்க்குத் துன்றிய சுவை யொடு சொல்லும் பான்மையராதலைக் கண்ட எளியேன், இவர்கள் "கலைப்பொருள் தாளுய்க் கல்லாலடியில் தலைப் பொருளுணர்த்திய தற்பரசிவனர், சொற்றிறங் கொண்ட தோன்றல் கண்டீர்" என்று சொல்லி யின்புறுவேன்.

இனி, பல்கலைக் கழகத்துத் தமிழ்ப் பேராசிரியராகிய திரு. சோமசுந்தர பாரதியாரவர்கள், M.A., B.L., தம் பதவியி னின்று விலகி ஓய்வு பெற்றுக்கொண்டவுடன் அப் பெரும் பதவியை இவர்கள் ஏற்றுக்கொண்டபோது இவர்கட்கு உறுபணியியற்றும் உரிமைப்பேறு பெற்று நனியனுக்கன யினேன். பெரும் பொறுப்பு வாய்ந்த உயர்பதவியில் தலைமையுடைய தாம் திறம்பெற நடந்தும், தம் தலைமையின் கீழ்த் தங்கிய தக்காரையும் தண்ணியரையும் தக்காங்கு நடத் தியும், தலைமைக்கு இழுக்குருவாறு விளங்கினார்கள்.

நம் தமிழகத்து முப்பெரும் பல்கலைக் கழகங்களாகிய சென்னை, அண்ணாமலை, திருவாங்கூர்ப் பல்கலைக் கழகங் களில் மந்திரக்குழுவிலும் மந்தணக்குழுவிலும் பதவிபெற்று அவற்றுக்குரிய பலதிறலைப்பட்ட செயல்களைப் பல்லாற்றான் நாடிச் சூழ்ந்து அந் நன்னர் நாட்டமுடைச் சூழ்ச்சித்துறை உறுப்பினர் உவக்க வினையாற்றும் திறமெல்லாம் எளியேன் விழைவொடும் வியப்பொடும் கண்டு பாராட்டுவேன். வீறு பெறு முறையில் வேறுபடு குழுவினுள் காரிய நெறிகளைக் கைக்கொள்ளுதற்கென நேரிய தாள்களை (Records) நிரல் படத் தொகுத்துக் கூரிய கொள்கையைக் குறிக்கொண்டு நடாத்தும் பெற்றியைக் கண்கூடாகக் கண்ட எளியேன் அங்கில வாணரும் ஆபீசு முறைகளை இங்ஙனம் ஆற்றும் ஏற்றம் பெற்றுளர்கொல் என்று கூறிக் கொண்டாடுவேன்.

இங்ஙனம் இப் பெரியாரின் சீரிய திறங்களை இயல்புளிக் கருதி இடம்பெற விரிக்கினும் முற்றக்கூறும் பெற்றியின் அமையா; அணுக்க நெறியில் அமைந்த எளியேன் இவர் கட்குரிய ஏவல் திறத்தில் எழுதும் பணியாற்றப் புக்க ஒரு நாள் B.O.L. பட்டப் பரீட்சையில் யான் தக்காங்குத் தேர்ச்சி பெற்றேனென மெல்ல நின்று சொல்லக்கேட்டுக் களிப்புடன் நன்கொடை அளிக்கக் கருதித் தான் விழைந் தெடுத்த தனிக் கதர் ஆடை துன்னிழைச் சீர்மையொடு பொன்னிழையுற்றது, கொட்டைக் கரையது, பெட்பக் கொடுத்துக் கொள்கென விள்ளக் கொண்ட கொடைப் பொருள் இன்றும் போற்றி எளியேன் வைத்துள்ளேன். இவர்களது நீடிய வாழ்க்கையைக் குறித்து இறை திருவருளை வழுத்துகின்றேன்.

தி. பொ. பழனியப்ப பிள்ளை.

**அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாசிரியர் (Senior Pandit) பண்டிதர், திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் எழுதியது.**

உயர்திரு பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்களைத் தமிழ்நாடு நன்கறியும்; பொதுவாகத் தமிழர்கட்கும், சிறப்பாகத் தனவணிகர்கட்கும் உயர்வளித்து விளங்கும் இவர்கள் அறுபதாம் ஆண்டு விழா, தமிழ்நா டெங்கணும் கொண்டாடப் பெற வேண்டுவதாம்.

இவர்கள், தொல்காப்பியம், அகநானூறு முதலிய எல்லா இலக்கண இலக்கியங்களையும், திருமந்திரம் முதலிய சமய நூல்களெல்லாவற்றையும் அவற்றின் உரைகளுடன் ஐயந்திரிபறக் கற்றுத் துறைபோய நற்றவக் குரிசிலாவார்கள். சொற்சுவை பொருட்சுவை நிறைந்த செய்யுளியற்றுந் திறமும், உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் உரைநடை எழுதும் ஆற்றலும் இவர்கட்குண்மையை, முறையே இவர்களியற்றிய மண்ணியல் சிறுதேர், உரைநடைக்கோவை என்னும் நூல்களாலறியலாம். இவர்கள் வடமொழிப் புலமை மாண்புக்கு, இவர்கள் மொழிபெயர்த்துதவிய சுக்கிர நீதி, மண்ணியல் சிறுதேர், உதயண சரிதம், சுலோசனை என்னும் அரிய நூல்களும், அவற்றிற்கு ஆன்றோ ரெழுதிய மதிப்புரைகளும் தக்க சான்றுகளாம். இங்ஙனம் இருமொழிப் புலமையும் ஒருங்கு வாய்ந்திருத்தலறிந்து "**தென் சொற் கடந்தான் வடசொற் கடற்கெல்லை தேர்ந்தான்**" என்று ஒரு புலவர் இவர்களைப் பாராட்டினர். இவர்கள் நூல்கள், இந்தியாவிலும் இலங்கையிலும் உள்ள பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும் பாடமாக வைக்கப்பெற்றுப் பல்லாயிர மாணவர்கட்கு அறிவூட்டுகின்றன.

பொன் விழா வெள்ளி விழா முதலிய கழக விழாக்களில் இவர்கள் தலைமை பூண்டு, நுண்பொருள்களையும் எண் பொருளவாகச் செலச்சொல்லிக், கற்றோரையும் மற்றோரையும் வயப்படுத்துகின்ற சொற்பொழி வாற்றுந் திறன், நிகரற்ற தலைமையுடையதாம். தென்னிந்தியாவிலும் இலங்கையிலுமுள்ள பற்பல கழகங்கள் இவர்கள் தலைமையைப் பெற்றுச் சிறப்புற்றன.

இவர்கள், அகநானூற்றின் ஆழத்தையும், திருவாசகத் தேனையும், பிற நூல்களின் புதைபொருள்களையும் ஆய்ந்து

தாமும் இன்புற்று, அவற்றைப் பிறர்க்கறிவுறுத்தி உலக மும் இன்புறக்கண்டு காமுறும் கற்றறிந்தா ராவர். "மாரி போற் கொடுப்பினும் மந்தனைவிட்டுக் கூரியனுடனே கொடுத் தும் பழகுக" என்பதற்கேற்பச் செல்வராயினும் அறிவில் லாதவரை விட்டுச் செல்வமிலராயினும் அறிஞரிடத்தில் மதிப்பும் நட்புங் கொள்வது இவர்கட் கியல்பு.

இவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் விரிவுரையாளராகவும், தமிழ்ப்பேராசிரியராகவும் அமர்ந் தும், சென்னைப் பல்கலைக் கழகத்திலும் திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்திலும் தமிழ்ப் பகுதிகளில் தலைமை பூண்டும், மதுரைத் தமிழ்ச் சங்கம் கரந்தைத் தமிழ்ச் சங்கம் இவற்றின் உறுப்பினராயும், யாழ்ப்பாணம் ஆரியதிராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்திற் பரீட்சகராகவும் இருந்தும் தமிழுக்குச் செய்துவரும் தொண்டுகள் அளப்பில. ஆங்கிலங் கல்லாதவர்களுள், தமிழ்ப் பேராசிரியராயும், Board of Studies தலைவராகவும் இருந்து திறம்பெற நடாத்துஞ் சிறப்பு இன்றுவரை இவர்கள் ஒருவருக்கே யுரியதாம்.

தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பெருந்துணையாய் நின்று நிலவும் சன்மார்க்க சபைக்கு இவர்கள் கண்போன்றவர்க ளென்றலும், சன்மார்க்க சபை இவர்கட்குக் கண்போன்ற தென்றலும் சாலப் பொருந்துவனவாம்.

உரைக்கப்படும்பொரு ளுள்ளத்தமைத்து விரையாம லும் வெகுளாமலும், விரும்பி முகமலர்ந்து கொள்வோன் கொள்வகையறிந்து அவனுளங்கொளக் கற்பிக்கு மியல்பு இவர்கட்கமைந்த தனிப் பெருஞ் சிறப்பாகும். இவர்களால் உண்டியும், கல்வியும், வேலையும் பெற்ற மாணவர் பலராவர். இவர்க ளியற்கையறிவின் முதுமையும் கல்வியறிவின் பெருமையும் கருதிச் சென்னை மாகாணத் தமிழர் சங்கத்தார் முதுபெரும் புலவர் என இவர்கட்குப் பட்டமளித்தது போற் றத் தக்கதாம். அப் பட்டம் இவர்களைச் சார்ந்து சிறப் புற்றதென்று கூறுதல் மிகையாகாது.

— [illegible], பெருஞ் செல்வமும் நிகரற்ற வண்மையும் நுண்ணறிவும் படைத்த தமிழரசாகிய உயர் திரு செட்டிநாட்டரசரவர்களும், இளவரசரவர்களும் இவர்கள் பால் மதிப்பும் நட்புங் கொண்டிருத்தல், பண்டைக்கால

அரசருக்கும் புலவருக்கும் அமைந்த சிறப்பியல்களை நினை வூட்டுவதாம்.

பெ. ராம. ராம. சிதம்பரஞ் செட்டியாரவர்கள், திரு. தீ. கந்தசாமிப் பிள்ளையவர்கள் முதலிய அறிஞர்களால் அமைக்கப்பெற்ற, புலவர் பெருமக்களின் அரிய கட்டுரைக ளாகிய அன்பு மணம் வீசும் இதழ்களைக் கொண்ட மணி மலர், உயர்திரு ராஜா அவர்கள் பொற்கரத்தில் மலர்ந்து, நம் பண்டிதமணி யவர்களைச் சேர்ந்து இவர்கள் அறுபதாம் ஆண்டு நினைவுக் கறிகுறியாக நின்று நிலவுவது உன்னுந் தோறும் உன்னுந்தோறும் உலப்பிலா மகிழ்வளிப்பதாகும்.

'உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்'பினையுடைய இவர்களும், இவர்கள் அருமைத் துணைவியாரும், பெருமை மக்களும் வழிவழிச் சிறந்து பல்லாண்டு வாழுமாறு தில்லைப் பெருமான் திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

மைசூர் மஹாராஜா கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. S. உருத்திரபதியவர்கள், M. A., எழுதியது :

"பண்டிதமணி யவர்களைத் தாங்களும் தங்கள் உடன் பிறந்தோரும் தந்தையாகப் பெறுதற்கு முற் பிறவியில் பெறலருந் தவம் புரிந்திருத்தல் வேண்டும். தாங்கள் புலவர் திலகத்திற்கு ஒவ்வொரு ஆண்டும் பிறந்த தினம் கொண் டாடி வருவீர்கள் என்று நினைக்கின்றேன். அறுபதாவது ஆண்டு நிறைவுச் சாந்தித் திருமணத்தை மிகச் சிறப்பாகக் கொண்டாடுவது மிகவும் இன்றியமையாதது. தமிழ் நாட்டில் பண்டிதமணியவர்களின் தேனினும் பாலினும் தித்திக்கும் சொற்பொழிவைக் கேட்டிராத தமிழன் ஒருவனும் இரான் என்று எண்ணுகின்றேன். கடந்த பல ஆண்டுகளாக அவர் கள் தமிழ் நாட்டிற்குப் புரிந்த தொண்டு மதிப்பிடற்பால தன்று. சுமார் ஏழெட்டு ஆண்டுகளாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகவும், பேராசிரியராக வும் வீற்றிருந்து புரிந்த தொண்டு யாவரும் பாராட்டத் தக்கது. ஆகவே அவர்களது அறுபதாம் ஆண்டுப் பிறந்த தினத்தைப் பொதுவாகத் தமிழ் நாட்டிலும், சிறப்பாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் கொண்டாடுவது மிகவும் பொருத்தமானதென்று யான் கருதுகின்றேன். ஓர்

நினைவு மலர் வழங்கல் வேண்டும். வாடா மாலையாம் வண்டமிழ்வாணர் வளமார்ந்த பாமாலை சூட்டிப் பாவலர் பெருந்தகையைப் பரவுதல் கடன் எனக் கருதல் வேண்டும். தமிழர் எண்டிசைபோற்றும் பண்டிதமணி யென்று சொல் வது உயர்வு நவிற்சியல்ல. அவர்கள் பெங்களூர் விஜயம் செய்த ஞான்று, அவர்கள், கன்னட மொழியின் முடிசூடா மன்னராய் விளங்கும் திரு. இராஜ சேவாசக்த Prof. B. M. ஸ்ரீ கண்டையா அவர்கள், M.A. B.L. தலைமையின் கீழ், "சிலம்பின் வென்ற சேயிழை நங்கை" என்றதோர் அரிய சொற்பெருக்கால், கன்னட மொழிவல்ல ஆங்கிலப் பேராசிரியராய திரு. ஸ்ரீகண்டையா அவர்களையும், வண்டமிழ் அறியாத ஏனைய கன்னடர்களையும், மற்றத் தமிழன்பர்களையும் தண்டமிழ் மொழியால் பிணித்து வென் றது இன்னும் என் மனக்கண்முன் நிற்கின்றது. தமிழின் நிலை கன்னட நாட்டில் மிக உயர்ந்தது. அன்று கூடிய கூட்டம் போல் என்றும் கூடியதில்லை யென்னலாம். அத்தகைய சீரிய புலமையும், சொல்வன்மையும், எழுத்துவன்மையும், வடமொழி தென்மொழி இரண்டையும் ஒருங்கே ஆய்ந்த மதி வன்மையும் வாய்க்கப்பெற்ற புலவர் பெருந்தகையைக் காண்பதே இன்பமாகும். அவர்கள் நயவுரையைக் கேட்பது சிந்தைக்கும் செவிக்கும் ஒருங்கே யின்பம் பயப்பதாகும். அவர்களது மாணவர் குழுவில் யான் ஒரு கடைமாணாக்கன் என்று சொல்லிக்கொள்வதில் எனக்குத் தனி யொரு பெரு மையும் இன்பமும் உண்டு."

S. உருத்திரபதி.

"தங்கள் அறுபதாம் ஆண்டு நிறைவுச் சாந்தித் திரு மணம் நடைபெறுவதைக் கேட்டுத் தமிழுலகம் இன்று பெரு மகிழ்ச்சி யுறுகின்றது. தங்கள் ஆழ்ந்த கடவுளன்பும், செறிந்த புலமையும், இணையற்ற அறிவுடைமையும், ஆட்சித் திறனும், கேட்டார் மனத்தைப் பிணிக்கும் சொல்வன்மையும், கண்டாரைப் பரவசமாக்கும் முகப் பொலிவும், ஆகிய இந் நலன்களை யெல்லாம் கொண்டு தாங்கள் இவ்வாண்டுகளி லெல்லாம் தமிழன்னைக்கு ஆற்றிய தொண்டினை யெல்லாம் நினைவு கூர்ந்து அவ்வம்மை இன்று பெருங் களிப்படை கின்றனள். அவள் ஆசி தங்கள்பால் என்றும் நிலவுவதாக. எல்லா நலன்களையும் பெற்று நீடூழி தாங்கள் வாழ்

வீர்களாக. இன்று மண நிகழ்ச்சி மிக்க பெருமையுடன் நடந்தேறுவதாக."

ரா. விஸ்வநாதன்.
(Presidency College, Madras)

"தமிழர்களின் நாயகமாக விளங்கும் தாங்கள் நீடுழி வாழ்ந்து இன்னும் தமிழுக்கும் தமிழர்கட்கும் சலியாது பேருதவி செய்யுமாறு இறைவனை வழுத்துகின்றேன்."

"வாழ்க பல்லாண்டு எங்கள் மணிக் கதிரேசர்."

S. திருவேங்கடம்.

"நவிஒரு றும் ஞாயம்போல்வீர்! விரிகதிர் பரப்பி எமையாண்ட பண்டிதமணியே! நகைமுகத்தான் நல்லறி வூட்டிய பாங்குடைப் பெருந்தகையீர்!

நுங்கள் அறுபதாம் ஆண்டு நிறைவுச் சாந்தித் திருமண அழைப்பிதழ் பெற்றேன்; களிப்பெய்தினேன். மனக்கண்ணால் அக் காட்சியைக் காண்பேன். அடங்கா மகிழ்ச்சியை எடுத்துரைக்கத் தமிழ்மொழியே போதாது. எம்மொழியில் இயம்புவேன். இறைவன் இன்னருளால் நாளைத் திருமணம் உரைசால் சிறப்புடன் இனிது நடைபெறுவதாக."

T. P. நவநீத கிருஷ்ணன்

இருமொழிப் புலமைப் பெருநிதிக் கிழவர், பண்டிதமணி, மு. கதிரேசச் செட்டியாரவர்கட்குப் பாராட்டு.

"செந்தமிழ்ப் பாண்டிநாட்டின் கண்ணே திருப்புத்தூருக்கு அணித்தாயுள்ள மகிபாலப்பதியிலே வயிரவன் கோயில் கேரள சிங்க வள நாடாகிய ஏழகப் பெருந்திருவான வீரபாண்டியபுரத்தில் சிறுகுளத்தூருடையாரான முத்துக் கருப்பன் செட்டியாரின் நற்றவப்பயனாக அவர்களின் மூத்த குமாரராகப் பிறந்து, "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்ற பொய்யா மொழியை மெய்யா விளக்கிப் புகழுடன் வாழ்கின்றவர்களே எனக்கினிய அண்ணலாகிய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாராவார்கள்.

இவர்கள் இளமையிலேயே கணபதி துணைக்கொண்டு தென்மொழியும் வடமொழியும் செவ்விதிற் கற்றுச் சிறப்புற்றார்கள்.

"அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்-உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை"

என்றுங்கு உயிர்க்கு உறுதுணையாகிய கல்வியை நன்கு கற்று அறிந்து இன்புறும் இவர்கள், உலகில் பலரும் இன்புற வேண்டும் என்னும் விருப்பால் யாண்டும் விரிவுரையாற்றிப் பலரும் கல்வி நலங் கைக்கொண்டு இன்பம் நுகரும்படி செய்தார்கள்.

இவர்களின் கல்விப்பெருக்கும் விரிவுரையின் நயமும் யாரெலாம் பரவக்கேட்ட பாண்டித்துரைத் தேவர், அரசஞ் சண்முகனார், கந்தசாமிக் கவிராயர், மகாமகோபாத்தியாயர் முதலான செந்தமிழ்ச் செல்வர் பலரும் இவர்கட்கு நெருங்கிய தொடர்புடையர் ஆனார்கள். ஆகவே மேலைச் சிவபுரியில் திருவாளர் வ. பழ. சா. பழனியப்ப செட்டியா ரவர்களைக் கொண்டு கணேசர் செந்தமிழ்க் கலாசாலையும் சன்மார்க்க சபையும் முதன்மையாகக் கண்டார்கள். அதி லிருந்து தனவணிகர்களின் பல ஊர்கள்தோறும் பிறஊர்கள் தோறும் கல்விக் கழகங்கள் பல தோன்றின.

சேக்கிழார் கவித்திறம், கம்பர் கவிநயம், தேவார திரு வாசகம் ஆகியவைகளின் நுண்பொருள் முதலானவைகளை இவர்கள் எடுத்து விளக்கும் திறன் கண்டு பலரும் பரவசம் உறுவர். இன்னணம் இவர்கள் ஆற்றிய விரிவுரைகள் பல் லாயிரக் கணக்கினவாகும்.

இவர்கள் தேவகோட்டை வைசிய சிவானந்த சபையில் தலைமை வகித்திருந்தபோது அச் சபையின் பொலிவானது தேவ சபைபோன் றிருந்ததெனப் புகழ்ந்து பாராட்டப் பெற்ற ஒரு வெண்பாவை ஈண்டுக் காட்டுகின்றேன்.

*"வைசிய சிவானந்த வான்சபையே வான்சபையாம்
வைசியரும் மற்றவரும் வானவர்கள்—பெய்சுவைய
வானமுதம் நற்புலவர் வார்த்தை கதிரேசன்
வானவர்கள் யாவர்க்கும் மன்" என்பதாம்.

இவ்வாறே இவர்கள் எந்தச் சபைக்கு வந்துற்றாலும் அந்தச் சபை இந்திர சபையினும் ஏற்றமுடையதாகக்

* இது பண்டித ஸ்ரீ அ. கோபாலையரவர்கள் பாடியது.

காணப்பெறும். இவர்கள் தலைமை வகித்த கல்விக் கழகங்கள் பலவற்றிற்கும் நானும் எனது நண்பராயிருந்த இராமநாதச் செட்டியாரும் சென்று செவியமுதருந்தி இன்புற்று வந்துள்ளோம்.

இராமர் இருந்த இடம் அயோத்தி என்பதுபோல இவர்கள் எங்கிருந்தாலும் அங்கெல்லாம் சங்கமும் தமிழ் மணமுமே பொங்கித் ததும்பும். இவர்கள் கூட்டிய கழகங்கள் பலப்பலவாகும். இவர்களின் விரிவுரையை உயர்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமியவர்களே பாராட்டுவார்களென்றால் இவர்களின் சொல் நயம் பொருள் நயங்களைப் பற்றி வேறு எடுத்துக்காட்டும் வேண்டுமோ? இவர்களை யறியாத புலவருமுளராமோ? இவர்களின் பெருமையைத் தமிழ்நாட்டிற் பிறந்து வளர்ந்த தமிழ் அறிஞர்கள் பலரும் பாராட்டுவர்; தமிழ்க் கழகங்கள் முழுதும் தமிழ் உலகமும் போற்றிப் புகழும்.

"அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்" என்ற முதுமொழிப்படி செட்டிநாட்டரசரவர்கள் இவர்கள்பால் உள்ளன்புடையவர்களாய் இவர்கட்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியப் பதவி யளித்தார்கள். அதிலிருந்து இவர்கள் பல்லாயிரக்கணக்கான மாணவர்களைப் பயிற்றுவித்து மாண்புறச்செய்து அம் மாணவர்களாலும், செட்டிநாட்டரசரவர்களாலும், பிற பல பெரியார்களாலும் சிறந்த மதிப்பைப் பெற்றார்கள்.

வடமொழியிலிருந்து "சுக்கிர நீதி" என்னும் நூலை மொழிபெயர்த்து வெளியிட்டும், இவர்கள் ஆற்றிய விரிவுரைகளுள் சில தொகுத்து 'உரைநடைக் கோவை' என்னும் ஒரு நூலும் பிறவும் வெளியிட்டும் உள்ளார்கள்.

சென்னைப் பல்கலைக் கழகத்திலும் தகுதியான ஸ்தானம் பெற்றுள்ளார்கள்.

"திரைகடலோடியும் திரவியந் தேடு" என்றபடி தன வணிகப் பெருமக்கள் பொருளீட்டும முறை யொன்றில் தான் தேர்ந்து திருமகளின் கருணைக்கு மாத்திரம் பாத்திரராவார்களோ என ஐயுறுவண்ணம் திருமகள் கருணையும் கலைமகள் கருணையும் பெற்றுப் பராசக்தி கருணைக்கும் பாத்

திரராய் உள்ளார்கள் என்பது இவர்களாலேயே விளக்கப் பெற்றது.

"தெள்ளமுத மனைய கல்விப்பொருள் படைத்திடில் தேசமெல்லாந் துதிக்குஞ், செயத்தம்பமான புகழ் நிலை நிற் கும்" என்றவாறு இவர்களைத் தேசமெல்லாந் துதிக்கின்றது. இவர்கட்கு வெற்றியுடன் என்றும் பொன்றாப் புகழ் நின்று நிலவுகின்றது. எழுமைக்கு மேமாப்புடைய விழுமிய கல்வி யால் அறிவு முதிர்ந்து "அறிவுடையா ரெல்லாமுடையார்" என்ற திருவாக்கின்படி கல்வி, செல்வம், அன்பு, அருள் என் னும் எல்லா நலனும் இயையப்பெற்று விளங்கும் இவர்கள் மதுரைத் தமிழ்ச் சங்கம், கரந்தைத் தமிழ்ச்சங்கம் ஆகிய எல்லாச் சங்கத் தலைவர்களும், புரவலர்களும், புலவர் பெரு மக்களும், தமிழ்ப் பெரியார்களும், தனவணிகப் பெருமக்க ளும் பாராட்டுதற்குரிய தனவணிக குலமணியாக, பண்டித மணியாக விளங்குகின்றார்கள்.

புலவர் பாடும் புகழுடையோராய் விளங்கும் இவர்கள் "மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன், நன்கல நன்மக்கட் பேறு" என்ற தேவர் திருவாக்கின்படி இல்லிற்குரிய நல்லற மனைவியை மணந்து நன்மக்கட்பேறும் பெற்று நல்வாழ்வுற் றுள்ளார்கள்.

மனைமக்கள் மாண்புடன் இனிது வாழும் இவர்களின் அறுபதாண்டு நிறைந்து அறுபத்தோராவதாண்டு தொடங் கும் விழா விசு புரட்டாசி உகூஉ திருவாதிரையாகிய இந் நாள் இவர்களின் மாளிகையில் தொடங்கிச் சிவாகம முறைப் படி வேள்வி முடித்து, செட்டிநாட்டரசரவர்கள் தலைமை யில் கொண்டாடப் பெறுகிறது. புரவலர்களும் பிரபுக் களும் உற்றார் உறவினரும் புலவர் பெருமக்களும் நிறைய வந்து குழுமி, கண்டும் கேட்டும் களிப்புறுகின்றார்கள். கட வுள் வழிபாடுசெய்து இசையரங்கு நடைபெறுகிறது. தலைவ ரவர்கள் பொன்னுரை புகன்று 'மணிமலர்' பரிசு வழங்கு கின்றார்கள். பல அன்பர்களும் வாழ்த்துகின்றார்கள். இந் தச் சமயத்தில் நானும் எனது அண்ணலாகிய பண்டிதமணி யவர்களைப் பாராட்டி அவர்களின் அறுபதாவதாண்டு விழா இனிது நிறைவேறவும் அவர்கள் மனைமக்களாகிய வளங் களுடன் எண்பதாவதாண்டு நூறுவதாண்டு விழாக்களும் கொண்டாடப்பெற்றுப் பல்லாண்டு பல்லாண்டாக வழி

வழி இனிது வாழவும் வேண்டுமென இங்கிருந்தே எங்கள் குல தெய்வமாக விளங்கும் வடிவுடை மங்கை உடனுறைய வள ரொளி நாதரையும், வழிபடு தெய்வமாக விளங்கும் உலக நாயகி உடனுறைய பசுபதிநாதரையும் பிரார்த்தித்துப் போற்றி வாழ்த்துகின்றேன்."

**சிவநேசன் இராமசாமி,**
*திருத்தென்குடித்திட்டை.*

"எனதுள்ளத் தடத்தில் ஓவாது பொலிந்து மணந்து சிவஞானச் செந்தமிழ்த் தேன் சிந்திவரும் தேவரீருடைய திருவடிப் பூந்தாமரைகளுக்கு மிக்க அன்பு வணக்கங்க ளுடன் எழுதிக்கொள்வன.

"தங்கள் 'அறுபதாம் ஆண்டு நிறைவு விழா'வின் அழைப்பிதழ் கிடைக்கப்பெற்று உள்ளம் களிபேருவகை யெய்துகின்றது.

"வளமான இனிய செய்யுணடை உரைநடை எழுதுந் திறனும், இயற்கை மதிநுட்பத்தாற் பெருநூற் கடல்களை ஆர அளைந்து பெறற்கரும பொருண்மணிகள் கண்டெடுத்து அவற்றை ஒளிபெறச்செய்து சுவைமலிந்த எழுத்துக்களா லும் சொற்களாலும் யாண்டும் இனிப்ப வழங்கிவரும் மாண் புலமும் ஒருங்கு வாய்ந்து திகழும் தங்கள் நிறைவு விழாவில், நேரிருந்து பணியாற்றும் பேறு இவற்குக் கிடைத்திலது.

"எளிய பொருள்களிலும் விழுமிய சுவைத்திறங்கள் கண்டு அவற்றை உலகுக்கு ஒளியுறப் பயன்படுத்தவல்ல இலக்கியச் சுவையாளர்களே, நாட்டுக்கு நிலையாக உதவி செய்ய வல்ல பெருமக்களாகின்றனராதலின், அவ் விலக் கிய நலமே ஓர் வாழ்க்கையுருவாக அமைந்துள்ள தாங்கள் இத் தமிழகத்தின் இதயமே யாகின்றீர்களென்பது தானே போத ரும். தாங்கள் இத் தமிழ் நாட்டின் நடுவண் திகழ்தலும் இவ்வுண்மைக்கு அரண் கோலும்.

"இதய ஒலியே வாழ்நாட் பேற்றின் அடிப்படையாக லின், பெருமானே, தமிழகத்தின் நிலைபேறு தங்கள் போன் ருரது வாழ்நாள் நிலைபேற்றையே நிலைக்களனுகக்கொண்

"சிறந்தோர் அனைவரும் இந் நலன் நினைந்தும் தங்கட்கு இன்று வாழ்த்துக் கூறும் பேறு பெறுகின்றனர்.

"தாங்களும் தங்கள் அன்பார்ந்த குடும்பத்தவரனைவரும், இவண், நலம் பல மலிந்து இனிது ஊழி வாழ்ந்துவர எல்லாம் வல்ல அம்மையப்பர் திருவருளை ஒன்றுக்கும் பற்ற இப் புல்லியேனும் உள்ளக் கனிவுடன் வேண்டி வழுத்துகின்றேன்."

[illegible]

"தங்களுடைய உயரிய செந்தமிழ்த் தொண்டும் சீரிய சைவத்தொண்டும், நூலாலும் சொற்பொழிவாலும் நம் தமிழ் மக்கட்கு மேலும் பல்வகை யாக்கந் தரத், தாங்கள் பல்லாண்டுகள் உடற்செம்மையுடன் வாழ்கவென எம்பெருமான் பொன்னடிகளை மனமொழி மெய் ஒன்ற வாழ்த்தி வணங்குகின்றேன்."

வ. சுப்பையா.

"தமிழ்நற் பெருந் தொண்டர்" **புத்தனேரி திரு. ரா. சுப்பிரமணியன்** அவர்கள் எழுதியவை :—

பைந்தமிழ் வாவியின் பல்துறை மூழ்கிக் கலைநீர்தன்னுள் இன்பந்திளைத்து, "யான் பெற்ற இன்பம் பெறுகவிவ் வையகம்" என்னும் நல்லுள்ளத்தால், தமிழ் வாவிக் கலை நீரைத் தமிழர் யார்க்குந் தட்டின்றியருளித் தண்ணளி பரப்புந் தகைமையீர் !

நும் அறுபான் ஆண்டு நிறைவைச் செவிமடுத்துத் தமிழுலகு பேருவகை யெய்துகின்றது. இற்றைநாள் என் இதயம் மலர்ந்து "நீலமணி மிடற்றொருவன் போல மன்னுக பெரும" என வாழ்த்துவதன்றி, நும் புலமைக் கொவ்வும் மற்றொரு கைம்மாறறிகிலன்.

வாழிய பண்டித மணியே வாழ்க !

**ரா. சுப்பிரமணியன்.**

"தமிழகத்தின் தவப்பயனாலுதித்த தாங்கள் இந்நாட்டகத்தே செய்த செயற்கரிய செயல்கள் அளவிடற்கரியன. நல்லிசைப் புலமைச் சான்றோர்களருளிய இலக்கியக் கடலினுள்ள அரும்பெரு மணிகளைத் தமிழ்நாட்டார் புனைந்தொளிரும்வண்ணம் வள்ளன்மையானல்கும் பெரியார் தாங்களே என்பது யாவரும் அறிந்ததே.

இத் தமிழ் கூறும் நல்லுலகம் தங்களைப் பல நன்னூல்கள் இயற்றிப் பதிப்பித்து வெளியிடும் பான்மையால் நன்னூலாசிரிய ரென்றும், சொல்லும் பொருளுஞ் சிறப்பச் சுருங்கச் சொல்லல் முதலாய அழகுகளுடன் சங்க நூல்கட்கு உரைகூறும் வன்மையால் உரையாசிரிய ரென்றும், சைவ சித்தாந்தப் பெரு நூல்களில் உள்ள பத்தி ஞானமார்க்கங்களை நல்லோர் பலருக்கும் போதனை புரிதலால் போதகாசிரிய ரென்றும், பல பல்கலைக் கழகங்களிலுள்ள பேரவைகளிற் றலைமை தாங்கிக் கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கல்லும் கரையச் சொன்மாரி பெய்யுந் திறத்தாற் பேராசிரிய ரென்றும் புகழாநிற்கும்.

"மதி நிறைந்தார் மதியு ளெழுஞ்சுடராய் ஆரியமுஞ் செந்தமிழு மார்ந்த ஞானவாரிதியாய் விளங்கும் தாங்கள் இப்போது அறுபாணுண்டு நிறைந்து மங்கலச் சாந்தி புரிதல் போலப் பின்னும் அறுபாணுண்டு நெடிது வாழ்ந்து, இத் தமிழ் நாட்டார் விழையும் பெருமங்கல வெள்ளணி நாளைப் பெற்று ஒளிரும் வண்ணம் அருளுமாறு இறைவன் திருவடிகளைச் சிந்திக்கின்றேன்."

R. இராமாநுஜன்.
(மகாவித்வான் R. இராகவையங்காரவர்கள் குமாரர்.)

"அறுபது ஆண்டுகள் நல்வாழ்வு பெற்றுச் சைவத்திற்கும் தமிழுக்கும் தொண்டுசெய்த உங்கள் தந்தையார், மேலும் செல்வமும் உடல் நலமும் பெற்று மனைவி மக்கள் சுற்றத்தோடு இன்பமாகப் பல்லாண்டு வாழவேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனும் இளந்தமிழ் முருகனை இறைஞ்சுகின்றோம்."

தங்கள் அன்புள்ள,

ஈ. த. சொக்கம்மாள்,
ஈ. த. இராஜேஸ்வரி,
ஈ. த. பத்மாவதி.

"தோன்றிற் புகழொடு தோன்றுக" என்னும் ஆன்றோர் வாக்கிற்குச் சான்றாகத் திகழும் ஆசிரியப் பெருந்தகையீர்!

"யாதும் ஊரே யாவருங் கேளிர்" என்ற புறநானூற்றுப் பாடலைப் பாடிப் பொன்றாப் புகழ்பெற்ற புலவர் திலகமாகிய கணியன் பூங்குன்றனார் பிறந்த ஊரிற் றோன்றிய புலவர் சிகாமணியாகிய தாங்களும், அன்னாரைப் போலப் பொன்றாப் புகழ்பெற்றுத் திகழவேண்டுமென்பதே எனது பேரவா. அடியேனுடைய இவ்வெண்ணம் கைகூட எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவானாக. தங்களுடைய பெயர் பொன்னெழுத்துகளாற் பொறிக்கப்பட்டு இவ்வுலகம் உள்ளளவும் நின்று நிலைபெறுவதாக.

"தாய் மொழியாகிய தமிழேயன்றி ஆரியமென்னும் பாரிரும் பௌவத்தையும் கடந்து நின்ற ஆன்ற புலவராகிய தங்களுக்கு நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமும் நீண்ட ஆயுளும் ஈந்தருளுமாறு கூத்தப்பிரான் திருவடித் தாமரைகளைத் தொழுது இறைஞ்சுகின்றேன்."

V. செல்லப்பன்.

"பண்டிதமணி அவர்கள் தமிழ்மொழி உலகிற்கே ஒரு அணியாக விளங்கி வருகிறார்கள். அவர்களது அறுபதாம் ஆண்டு விழாவிற்கு ராஜா ஸர் அவர்கள் தலைமை வகிப்பது மிக்க பெருமைக் குரியதொன்றாகும். அறுபதாண்டிருந்து பணியாற்றும் பண்டிதமணி அவர்கள் இன்னும் பல்லாண்டிருந்து பணிபல புரியவேண்டுமென்று விரும்புகிறேன்."

அன்புள்ள

சொ. முருகப்பா.

"தாங்கள் எளியேனுக்குத் தந்துதவிய அறிவு தங்கள் மண விழாவில் கலந்துகொள்ளும்படி செய்தது. எவ்வாறெனில் (12-10-41) ஞாயிற்றுக்கிழமை அன்று காலை 9-மணிக்குமேல் 10-மணி வரை அன்பர் பலருடன் சென்று தில்லைப் பெருமானுக்கு அருச்சனை நிவேதனம் செய்வதுடன் 10½—க்கு மேல் 12 வரை மேலைவீதி, 91 நெ. கட்டிடத்தில் "சுதேசக் கழகம்" என ஓர் கழகம் ஏற்படுத்தி அதில் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையிலும் 60 நிமிஷ நேரம் திருக்குறள் சொல்லிக் கொடுப்பதாக (10½ to 11½) அறிவித்துத் தங்கள் பெயர் பொறித்த 60 திருக்குறள் மூலபுத்தகங்களை 60 மாணவர்களுக்கு அப்பொழுதே இனமாக வழங்கிப் பாடம் கற்

பிப்பதுடன் 12-மணிக்குமேல் சுமார் 100 ஏழைகளுக்கு 91 செ. கட்டிடத்தில் உணவளிப்பதுடன் மாலையில் சொற்பொழிவாற்றி, உணர்ச்சியால் அல்லும்பகலும் அறுபது நாழிகையும் இங்கிருந்தே கலந்துகொள்ள விழைந்துள்ளேன்.''

ச. சேதுசுப்பிரமணியன்.

"என் முன்னைக் கடிதத்திற் கண்டவாறு 12-10-41 ஞாயிற்றுக்கிழமை காலை 8-மணிக்குத் தாங்கள் நெடுங்காலம் வாழவேண்டும் என்று தில்லைப்பெருமானை அருச்சித்து வழிபட்டும் பின் 10½ முதல் 11½ வரை "கதிரேசக் கழகம்" என ஓர் கழகம் 91 செ. கட்டிடத்தில் ஏற்படுத்திப் பல திருக்குறள் மூலபுத்தகங்களைப் பல அன்பர்களுக்கு வழங்கி, பிரதி ஞாயிறுதோறும் திருக்குறள் 10½-யிலிருந்து 11½ வரை சொல்லிக் கொடுக்கப்படும் என்று அறிவித்து, எளியேனே 60 நிமிஷ காலம் பாடஞ்சொல்லித் தங்கள் விழாவைக் கொண்டாடினேன். பின் அன்பர் நூற்றுவருக்கு அன்னம் அளிக்கப்பட்டது."

ச. சேதுசுப்பிரமணியன்.

"அன்புமிக்க ஆசிரியரவர்கட்கு வணக்கம் பல.

தங்களுடைய ஆழ்ந்து அகன்றுள்ள கல்வியறிவாலும், கலையில் தெளிவாலும், கட்டுரை வன்மையாலும் தமிழுலகத்தையும் சைவ உலகத்தையும் கவர்ந்துகொண்டு விட்டீர்கள்.''

S. ஆறுமுகம்,
Government College, Palghat.

"தமிழ்த்தாயின் அருந்தவப் புதல்வரே !

தேமதுரத் தமிழோசையமைந்த திருவாசகத்தின் தித்திப்பைச் சுவைத்துப் பிறர்க்கும் எடுத்து ஓதியதால் தங்கள் புகழ் மண்டிக் கிடக்கின்றது. அதனை நோக்குங்கால் தமிழ்த்தாயின் இறுமாப்பு என்னே என்பது புலப்படும்."

இராமச்சந்திரன் கா. ச.

"புலவர் பெருமானாகிய தங்களது அறுபதாண்டு நிறைவு விழாக் காட்சியில் கலந்து மகிழும்பேறு எங்கள் தந்தையார் பெற்றனர். சிறு குழந்தைகளாம் நாங்கள் எழுநூற்றுவரும் தங்களுக்குப் பல்லாண்டுகள் நல்வாழ்வளிக்கப் பரம்பொருளைத் துதித்து வழிபடுகின்றோம். எங்கள் வள்ளலார் இல்லத்துக் குழந்தைகளின் பிள்ளையுள்ளங்களால் தங்களை வாழ்த்துகின்றோம். எங்கள் மதலை வாழ்த்துக்களை மாண்புடன் ஏற்க வேண்டுகின்றேன். திருமண விழாவில் தங்கள் உளமுவந்த எண்ணத்தால் குழந்தைகளாகிய யாங்கள் ஏற்றம் பெறுவோம்."

தணிகையரசு,
வாலாஜாபாத், வள்ளலார் மாணவர் இல்லம்.

தலைமை தாங்கிய வீரத்திரு, செட்டிநாட்டரசர் பேரறிஞர்
**M. அண்ணாமலைச் செட்டியார், LL.D., M.L.A., அவர்கட்குப்**
பாராட்டுக் கழகத்தார் மனமுவந்தளித்த

## வாழ்த்தியல் இன்னுரை.

திருவளருஞ் செட்டிநாட் டுயரரச !
குலத்தலைவ ! ! திருவார் சீர்த்தித்
தருவளஞ்சால் தமிழ்மொழிக்குத் தலைப்புலவன்
" கதிரேசன் " தமிழர் போற்றப்
பெருவளஞ்சால் நிறையறுப தாண்டுவிழாப்
பெருமையுறப் புனைநா ளிங்குத்
தருவளங்கொ ளிந்நாட்டு வள்ளால் ! நீ
தலைமைகொளல் தகைமைத் தாமே. (௧)

பன்னாட்டி லாங்காங்கே யுயர்பள்ளி
பண்ணிசையார் பள்ளி தேர்ந்து
முன்னாட்டி மூவருமே மொழியன்பார்
சிவன்கோயில், மூளும் நோய்கள்
பின்னோட்டங் கொளநாட்டும் மருத்துவஞ்சேர்
கோட்டமுயர் பீடு சான்ற
பன்னாட்டு நூலுமுறை கோயிலிவை
படைத்தகுடிப் பண்ப வாழி ! ! (௨)

உலகுள்ள வரையென்று மோயாத பேரறங்க
ளுஞற்றி நின்றோய்!
உலகுள்ளும் பேரறிஞர் வள்ளல்களி லொருவனீ
யோம்பி யுள்ள
பலருள்ளும் பேரறங்க ளெழுதவுய ரேடடங்காப்
பான்மைத் தாகும்
சிலவுள்ளி யுரைத்தெவனோ? "செட்டிநாட்
டரசாகுஞ் சிறப்புற் றோயே! (௧)

யாரொருவர் தன்பெயரா லோர்நகரு
மோர்நாடும் யாய்நாட் டென்றும்
பேர்பரவ நாட்டியவர்! புகைவண்டி
நிலையமொடு பெருமைத் தாய
பார்பரவும் பல்கலைசேர் கலைக்கழகம்
தம்பெயரால் படைத்தோர் யாரே!
பாரினிலெம் மரசாய நீயன்றோ
விவைபடைத்தாய் பண்பார் வேந்தே! (௨)

எங்கெங்கே யிந்நாட்டில் கல்விமணங்
கமழ்ந்தாலும் இறைவ! என்னே!
அங்கங்கே நின்கொடையின் புகழ்வீசக்
கண்டனம்யாம் அவையு மன்றி
இங்கெங்கும் புகழ்மணக்கும் மகளிர்மருத்
துவக்கோட்டம் எங்கள் வள்ளால்!
தங்குபுகழ் பெண்மணிகள் என்றென்றும்
வாழ்த்தெடுப்பத் தழைத்த தாமே. (௩)

காழகத்தி லெங்குடியோர் பெருமையுறத்
தூதுரைத்துக் காத்தோ யென்றும்
வாழகத்தி லெங்குடிக்கே நிலைத்தபுக
ழளித்தவுயர் வள்ளால்! நின்று
வாழ்புலத்தா லெங்குடிக்குப் புகழளித்த
கதிரேசன் மணிவி ழாச்சீர்
வாழ்புலத்தார் வாழ்த்தெடுப்ப நீதலைமை
கொளநிகழும் மாண்பு நன்றே. (௪)

தமிழர்களின் ஓவியங்கள் சிற்பங்கள்
பழங்கலைகள் தகைமை வேண்டித்
தமிழர்களின் பழங்கோயில் புதுப்பிக்கும்
குடிசிறக்கத் தலைமை தாங்கித்

தமிழர்களின் கலைவளத்தின் மாட்சியினை
  நனிவளர்த்துத் தனிச்சீர் பெற்றோன்
தமிழர்களின் தலைப்புலவன் "கதிரேசன்"
  மணிவிழாத் தழைக்க நன்றே. (எ)

பொருட்கொடைக்குத் தலைவனீ புலக்கொடைக்குத்
  தலைவனிவன் பொருளாற் செய்யும்
பொருளிவையென் றுலகினருக் குணர்த்தினையிப்
  பொன்புலவன் புலத்தாற் செய்யும்
[illegible]
  பெற்றியுளீர் "பொருள்சேர் நீவிர்"
இருவருங்கொள் மணிவிழா வெமக்கென்று
  மினிமைதரு மியல்பிற் றாமே. (அ)

உழைத்திடுமின்! காத்திடுமின்! கொடுத்திடுமின்
  என்றவுய ருரைகட் கேற்ப
உழைத்துயர்ந்து பொருளீட்டிக் காத்தளித்துப்
  புகழ்கொண்டாய் உலகில் என்றும்
இழைக்குமுயர் வரலாற்றில் நின்பெயரைப்
  பொன்னெழுத்தால் எழுதா நிற்பர்
தழைக்குமுயர் "கதிரேசன்" வரலாற்றி
  லிடம்பெற்றான் தழைக நன்றே. (கூ)

வாழியவிம் மணிவிழாக் கொள்புலவன்
  கதிரேசன் வாழி! வாழி!
வாழியிவன் மனைமக்கள் சுற்றமெலாம்
  பல்லூழி வாழ்க! நன்றே
வாழியரிச் சாறினிக்கத் தலைமைகொளு
  மரசண்ணா மலையார் வாழி!
வாழியரிம் மணிவிழாச் சிறக்கவுயர்
  செயல் புரிந்தோர் வாழ்க மாதோ. (௰)

## பண்டிதமணி யவர்களுக்கு
## மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபையார்
### கூறிய வாழ்த்து.

திருவாலும் கலைபயிலுந் திறத்தாலும்
  கொடையாலும் சிறந்து மன்னிப்
பெருவாழ்வு பெறுமகுட தனவணிகர்
  குலமுல்கிற் பிறங்கி யோங்க

ஒருவாநல் வளம்படைத்த "மகிபால
    நகர்த்" தோன்றி யுயர்ந்தோ ரேத்த
வருமாண்பு மிகுநலஞ்சால் "கதிரேச"
    மாமணியெம் வள்ளல் வாழ்க. (க)

தக்கவட மொழிக்கடலுஞ் சால்பமைதென்
    றமிழ்க்கடலுந் தகவின் மூழ்கிப்
புக்குநிலை கண்டுணர்ந்து பொழிந்தவரும்
    பொருள்கொணர்ந்து புலமிக் கோராய்த்
தொக்கபெருங் குழுக்கடொறுஞ் சொரிந்துமகிழ்
    நனிசிறப்பத் துலங்கக் காட்டி
எக்கணமு நயமுறநன் கெடுத்துரைக்கு
    மிவன்பெருமை யியம்பற் பாற்றே. (உ)

தண்டமிழ்மண் டலமுழுதுஞ் சார்ந்தபிற
    தலங்களிலுஞ் சலதி யார்ந்த
வெண்டிரைசூ ழிலங்கையினும் மேவுபிர
    சங்கமழை விழையப் பெய்தே
எண்டிசையுங் கலைப்பயிரால் அறிவுவிளைத்
    தெவ்வுயிர்க்கு மின்ப நல்கிப்
பண்டிதமா மணிப்பெயரே பாங்குபெற
    வெங்குமொளி பரப்ப வாழ்வோன். (ங)

தெள்ளும்வட மொழியினலஞ் செறிந்திலகு
    "மண்ணியல்நற் சிறுதேர்" முன்னு
வெள்ளிநெறி நூல்பிறவும் மிக்கபொருட்
    சுவைபொதுள விளங்கச் செய்தே
ஒள்ளியசெந் தமிழன்னைக் குவகையுற
    அலங்கரிக்க வுதவு மின்றேன்
வள்ளன்மை கண்டுலகில் மதியாதார்
    எவரிங்ஙன் வழுத்துங் காலே. (ச)

தன்னிக"ரண் ணாமலைப்பேர்ச் சருவகலா
    சங்க"மதிற் றமிழ்ப்பே ராசான்
என்னுமுயர் பதவிவகித் திளைஞர்மனங்
    கொளக்கலைக ளெளிதின் னூட்டிச்
சென்னைதிரு வனந்தைநகர் திகழ்கலைப்பள்
    ளியிற்றொடர்பு சேரக் கொண்டு

அன்னைதமிழ் மடந்தைதனக் கியாவரிவன்
போற்பணிக ளாற்றி னோரே. (ரு)

தென்னாட்டிற் சைவமுடன் செழுந்தமிழும்
வளர்ப்பதெனத் தெளிந்தோர் சூழ்ந்து
முன்னாட்டுஞ் சபைகளிலும் பல்வகையாக்
கங்களினால் முதன்மை கொண்டே
எந்நாட்டு மிசைபெறுநஞ் "சன்மார்க்க
சபை"யினுக்கோ ரெழிற்று யாகுஞ்
சொன்னாட்டிச் செயல்புரிந்து நாளுளும்
வளர்க்கும்வகை சூழ்வோன் அம்மா. (சு)

குலத்தாலும் குணத்தாலும் கோதிலரு
ளறத்தாலும் குறைவில் சீர்த்தி
நலத்தாலும் பிறர்க்குதவி நயத்தாலும்
அருண்மொழிநூல் நயந்த சிந்தை
வலத்தாலும் இவன்படைத்த மாட்சிமையைச்
சேடனுக்கும் வகுத்தா ராய்ந்து
சொலத்தாலும் போதாவென் றுன்னியாம்
விரித்துரைக்கத் துணிவ தென்னே. (எ)

இத்தகையோன் தனக்கறுப தாண்டுநிறை
வெய்தியஇவ் வினிய நாளில்
வித்தகர்பல் லாண்டிசைப்ப விப்பிரர்கள்
மறைவிதியின் வேள்வி செய்யச்
சித்தமகிழ் கொளுமன்பிற் சேய்களொடு
சுற்றமெலாந் திரண்டு சூழ
உத்தமமாம் மனைக்கிழத்திக் கொருதிருப்பொற்
றாலிபுனைந் துகந்தான் மன்றோ. (அ)

ஈண்டியவிம் மங்கலநாள் எழிலுறுநந்
தமிழ்மகளுக் கினிதின் ஏய்ந்த
காண்டகைய மணநாளாக் கருதிமனங்
களிக்கின்றேம் கதிரே சப்பேர்
ஆண்டகையும் அவன்மனையும் மக்களுமெல்
லாநலமும் அடைந்து வாழ
வேண்டுவன அருள்புரியும் விமலனடி
யிணைமலரை விரும்பு வோமே. (கூ)

## கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் உளம் உவந்தளித்த

### இயன்மொழி வாழ்த்து.

தமிழ்தழைக்க முச்சங்கம் நாட்டியுயர்
 பாண்டியர்கள் தாமு மொன்றித்
தமிழ்மொழியை வளம்படுத்திப் புகழ்பொறித்தா
 ரந்நாட்டின் தகைமை விஞ்சத்
தமிழ்முழங்கும் " மகிபால நகரிலுயர்
 வணிகர்குடித் தலைமை தாங்கத்
தமிழ்மொழியின் பெருமைமிக வெனப்பிறந்த
 கதிரிறைவ தழைத்து வாழி ! (க)

ஓரரசன் நிறையறுப தாண்டு விழாக்
 கொண்டுநனி யொளிரந் நாட்டில்
ஓர்புலவன் பண்டிதர்மா மணியாமெங்
 " கதிரேச " ரேைகை துள்ளப்
பேர்பரவ நிறையறுப தாண்டுவிழாக்
 கொண்டனனிப் பெரியோ னென்றும்
பார்பரவப் பைந்தமிழ்போற் பல்லூழி
 வாழிநலம் படர நன்றே. (உ)

ஒருதுறையி லொருமொழியில் வன்மைபெறப்
 பிறர்பலவாண் டுழைப்ப ரென்னே !
வருதுறைகள் பலவாய்ந்து பன்மொழியில்
 வன்மையிவ னுற்றான் கல்வி
திருவுறையுங் " கதிரேசன் " செந்தமிழ்த்தாய்
 தலைப்புதல்வன் சீர்த்தி நால்வர்
அருமறைதேர் தவைமகிழ வவர்புலத்தின்
 பொதியவிழ்ப்போன் அண்ணல் எங்கோன். (௩)

மணிமொழியார் வாசகமும் இளங்கோவின்
 சிலம்புமுயர் மணமார் நூலும்
அணிமொழியார் கம்பனூ லருந்தொண்டர்
 வரலாறு மழகு விஞ்சக்
கணியனவன் பூங்குன்றன் யாதுமூர்
 யாவருங்கே ளென்றே கண்ட
மணிமொழியின் பொருளுணரத் தமிழ்மழைபெய்
 மாமுகிலே மகிழ்ந்து வாழி !! (ச)

மண்ணியலின் சிறுதேரும் வெள்ளிநெறி
யெனும்நூலும் மற்றும் சில்ல
பண்ணுயர்ந்த செந்தமிழில் மொழிபெயர்த்தாய்
பாப்பலவும் பாடித் தந்தாய்
உண்ணவில வுவட்டாத வமிழ்தவுரை
நடைக்கோவை யவையுந் தந்தாய்
எண்ணருஞ்சீர் மாநாட்டிற் பல்லவையிற்
பலமொழிந்தாய் எழுதற் பாற்றோ ?
தென்மொழியி னுயர்சிலம்பும் வடமொழியிற்
சகுந்தலையும் செறியக் கொண்ட
நன்மொழியும் நற்பொருளும் ஒன்றிவா
வுரைவிரிக்கும் நாவல் லோயின்
இன்மொழியும் இருமபுலமை நிறைவும் நனி
யுணர்ந்தேயிந் நாட்டா ரின்று
பன்னுரூது பெரும்புலவ ரெனும் பட்டம்
வழங்கினருன் பண்பொன் றேயோ ? (௬)

சீரண்ணா மலைக்கழகத் தமிழ்ப் பகுதித்
தலைவனாய்ச் சிறந்து நின்றாய் !
காரண்ணுஞ் சென்னைப்பல் கலைக்கழகப்
பாடமமை கவின்குழுவிற்
கேரண்ணு மின்றலைவ ! திருவாங்கூர்க்
கலைக்கழகத் தியன்ற பெற்றிப்
பாரெண்ணுந் தமிழ்த்துறைதேர் குழுவிற்குந்
தலைவவுயர் பண்ப ! வாழி !! (௭)

பலகழகத் துயர்தலைமை பண்புயர
வேற்றனையுன் பண்பை யோர்ந்தே
பலகழகத் துயர்தலைவன் “செட்டிநாட்
டரசனெனும் பண்பார் வள்ளல்”
உலகுபுக ழுயர்மேலைச் சிவபுரியார்
சன்மார்க்க சபையி லுன்றன்
நலமமையுந் திருவுருவப் படம்நாட்டித்
திறந்தளித்தான் நங்கள் கோவே ! (௮)

... லின்னுரைகள்
வரைதலினே ரிருஞ்சித் தாந்த
இலக்குணர்த்தும் சாத்திரத்திற் பாவியற்றுந்
திறமையினி லெவரு மென்றும்

புலக்கணறி வுற்றுயா நயமறிந்திங்
குணர்த்துவதில் புலவ ரஞ்சத்
தலக்கணுயர் தலைமைகொளும் கதிரேசன்
தழைக்க நன்றே ! (௯)

நன்மைவள ரெங்கரந்தைத் தமிழ்ச்சங்கப்
பேரன்ப நாளும வேண்டிப்
பன்னலஞ்சேர் விரிவுரையா லாண்டுவிழாத்
தலைமைகொளும் பண்பால் பாரில்
நன்மைபுரி நல்லோரா விச்சங்கம்
வளர்ந்தோங்க நன்மை செய்தாய்
பின்னுமிதன் வளர்ச்சிக்காம் பொறையுனதே
புரந்திதனைப் பிறங்கி வாழி ! (௧௦)

வாழியுயர் பண்டிதமா மணியாமெங்
கதிரேசன் வாழி வாழி
வாழியிவன் மனை,மக்கள் சுற்றமெலாம்
புலவர்களைப் போற்றும் பெண்மை
ஆழியுல கினிற்பெருகக வழிகாட்டி
யிவ்விழா வமைத்த நல்லோர்
வாழிவிழாத் தலைமைகொளு மரசண்ணு
மலைவள்ளல் வாழ்க நன்றே. (௧௧)

## மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபைப் பழைய மாணவர் சங்கத்தார்

### கூறிய வாழ்த்து.

செந்தமிழா மணங்கினுக்கோர் திலகமெனப்
புலவர்புகழ் செழியர் நாட்டில்
கொந்துமலர்ப் பொழிலெங்கும் குழுமுமகி
பாலநகர் குலவி வாழும்
முந்துமிளங் கோக்களிலே முதல்வன்முத்துக்
கருப்பழகில் முற்று நோன்பின்
வந்துதித்த கதிரேச வணிகர்குல
மணியனையான் வாழ்க மாதோ. (௧)

ஆரியத்தி லிலக்கணங்க ளிலக்கியங்கள்
வரன்முறையா லாய்ந்து கற்றுச்

சீரியநந் தமிழ்மொழியி லெவ்வகைநூல்
    களும்பயின்ற தெளிவி னோடு
கூரியநல் லறிவுவள மீங்கிவன்பால்
    கண்டறிஞர் குழுக்க ளானோர்
பேரியல்பண் டிதமணியாம் பெருஞ்சிறப்புத்
    தந்தனரிப் பெற்றி நன்றே.

வேத்துமொழி பயின்றவரே வினைசெயவல்
    லுநரென்ன விளம்பும் பல்லோர்
வார்த்தைமறுத் திடுபவன்போல் மன்னுபெருங்
    கலாநிலயம் மருவி ஞாலம்
ஏத்துதமிழ் கற்றவரீண் டெய்தரிய
    உயர்பதவி யினிதிற் கொண்டேத்
தேத்துமருஞ் செயலெனினும் திறமையுற
    நடாத்தும்வகை தெளிவான் அம்மா.

செங்கமலை வளர்மேலைச் சிவபுரிச்சன்
    மார்க்கசபை சேர்ந்த கல்விச்
சங்கமதிற் கலைப்பயிற்சி சால்பழைய
    மாணவர்கள் சபைதான் கொண்ட
பொங்கியநல் விருப்பின்மூனம் போந்ததன்கட்
    பேரன்பு பூண்ட வாற்றால்
எங்குமிசை பரப்பிவளர் பிறைபோல
    நாளுளும் இலங்கு மாதோ.

இப்பெரியோன் மூவிருபான் ஆண்டுநிறை
    வெய்தியஇவ் வினிய நாளில்
ஒப்பரிய தமிழ்ப்புலவர் வாழ்த்துரைப்ப
    ஒக்கலெலாம் உவந்து சூழச்
செப்புமறை விதியின்வழிச் சாந்திமணம்
    செயலின்மகிழ் சிறந்தோ மின்றேன்
அப்பணிசெஞ் சடைப்பெருமான் திருவருளால்
    எந்நலமு மமைந்து வாழி.

## அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து நகரத்தார்
## மாணவர் கழகத்தார் அளித்த

### வாழ்த்துப் பத்திரம்

திங்களணி சடைப்பெருமான் றிருவருண்மிக்
    கோங்குபெருஞ் செல்வ மெய்தி

இங்கணக னிலமெங்கு மெண்ணிலறம்
வழுவாதே யியற்றி வாழும்
எங்கள்குல மணிவிளக்காய் எழின்"மகிபா
லப்பதி"க்க ணினிது தோன்றிச்
செங்கதிரோ னொப்பவொளி திகழ்"கதிரே
சப்"பெயர்கொள் செம்மல் வாழ்க. (க)

செந்தமிழா ரியமொழியிற் சிறந்த பல
நூல்களெலாந் தெளியக் கற்றே
யந்திலுறு பொருணயங்கள் அறிஞரெலாம்
வியப்பநனி யாய்ந்து காட்டிச்
சிந்தைமிக வுருக்குமருந் திறல்படைத்தா
யாதலின்முன் தேர்ந்த மேலோர்
தந்தனர்"பண் டிதமணி"யாம் தகுதியமை
தருஞ்சிறப்புச் சால நன்றால்.  (உ)

மலைநாட்டிற் கலைக்கழகம் வளரண்ணா
மலைக்கழகம் மாண்பார் சென்னைத்
தலைநாட்டும் பெருங்கழகஞ் சார்ந்துமா
ணவர்கள்பெறுந் தகுதி யாய்தல்
கலைநாட்டும் புத்தகங்கள் காணல்செயுங்
குழூஉத்தலைமை கவினக் கொண்டு
நிலைநாட்டும் புகழுற்றாய் நீணிலத்தில்
யாவருனை நிகர்ப்பா ரம்மா! (ங)

பெருங்கொடையன் எங்கள்அண்ணா மலைமன்னன்
நிறுவுகலை பிறங்கு மாடத்(து)
அருங்கலைகள் பயில்நகர மாணவரேம்
நடாத்திவரும் அரிய சங்கம்
ஒருங்குகலை கற்றவரீண் டுவந்தாசி
சொலவளர்ச்சி யுறுவ தெல்லாம்
இருந்து"மூது பெரும்புலவ"! நின்றலைமைப்
பேறுபெறுஞ் சிறப்பா லன்றோ. (ச)

எண்டிசையும் புகழ்பரப்பும் பண்டிதமா
மணியேமூ விருபான் ஆண்டு
கொண்டுநிறை சாந்திமணங் குவலயத்தோர்
மனமுவகை கொள்ளச் செய்தாய்!

கண்டுமகிழ் சிறந்தனமேற் காண்டகைய
சதவாண்டுங் காண்பாய் ஐய
அண்டர்பிரான் றிருவருளால் பலநலமு
மெஞ்ஞான்று மமைந்து வாழி. (ரு)

## திரிசிரபுரத்து அன்பர்கள் அளித்த

### வாழ்த்துப் பத்திரம்

அன்பும் அறிவும் நிறைந்த ஐயா !

நலம். எல்லாம் வல்ல இறைவன் திருவருளை முற்கொண்டு இன்று தங்கட்கு அறுபதாம் ஆண்டு நிறைவுச் சாந்தித் திருமணம் நடைபெறுவது எல்லோருக்கும் மகிழ்ச்சி அளிக்கின்றது. நாட்டுக்கு நலம்புரியும் வகையில் மக்கட்கு இன்றியமையாத அறிவொளி பரப்புவதே யாவற்றினும் சிறந்ததெனப் புகல்வர் பெரியோர். அத்துறையில் தாங்கள் தமிழ் மொழிக்கும், சைவ சமயத்திற்கும் ஆற்றிய தொண்டை அறியாதார் யாவர்? தாங்கள் சிறந்த நூலாசிரியராகவும், உரையாசிரியராகவும், மொழிபெயர்ப்பு ஆசிரியராகவும், நுண்மாண் நுழைபுலங்கொண்ட சீரிய ஆராய்ச்சியாளராகவும் விளங்குகின்ற தன்மை, தாங்கள் தமிழன்னையை அலங்கரிக்க வெளியிட்டுள்ள புது நூற்பணிகளால் தெற்றென விளங்கும். அன்றியும் தாங்கள் அண்ணாமலைச் சர்வகலாசாலையில் தமிழ் மொழிக்குத் தொண்டு புரிவதையும் யாவரும் அறிவர்.

புற இருள் கடிந்து ஒளிபரப்பி எழுகின்ற ஞாயிறே போன்று, அகவிருள் போக்கி அறிவொளி நிரப்பி வரும் கதிரேசப் பெயர் கொண்ட தங்கட்கு ஞாயிறாகிய இச் சுபதினத்தில் இவ்வைபவம் நடைபெறுவது சாலப் பொருத்தமே.

ஸ்ரீ தாயான செல்வரின் தண்ணருளால் தாங்கள் மேலும் உடல் நலம் பெற்றுத் தங்கள் வாழ்க்கைத் துணைவியுடனும், மக்களுடனும் சுகமே வாழ்ந்து சதாபிஷேகம் என்னும் நூற்றாண்டு விழாவையுங் கண்டு மகிழ்ந்து, காவிரி மணலினும் பன்னாள் வாழ்ந்து தமிழ் மொழிக்கு மேலும் தொண்டு புரிவீர்களாக ! நலம்.

## திருவையாற்று அரசர் கல்லூரித் திருவள்ளுவர் தமிழ் மாணவர் கழகத்தார்

கூறிய வாழ்த்து.

சந்தனப் பொதியச் செந்தமிழ் நாடெனும்
வழுதியர் வாழ்ந்த வளமலி நாட்டினில்
காடுங் கடுந்திரை நீர்ச்சுழிக் கடலிலும்
சாடுங் கலனும் சார்துணை யெனக்கொடு
பலிசை யாற்பண் டம்பகர் குடியே
வணிகர் குடியென வாழ்த்துவர் மேலோர்
அன்னதொல் குடியில் அமைந்தநற் குணனும்
கல்வியும் வாய்மையும் கணக்கிலாப் பட்டமும்
புகழ்பெறப் பெற்ற முதுபெரும் புலவர்
பண்டித மணியெனப் பாவலர் வாழ்த்த
அறுபது ஆண்டில் ஆற்றிய தொண்டால்
இறும்பூ தெய்தும் பெருந்தமிழ் நாடே
அதனால்,
செந்தமிழ் மொழியினைச் செவ்விதிற் கற்கும்
மாணவர் யாவரும் மணமலி யுவகையொடு
வாழிய பண்டித மணியே வாழ்கென
வாழ்த்துவம் யாமே வாழ்கபல் லாண்டே.

## நெற்குப்பை ஸ்ரீ விவேகாநந்த வாசகசாலையார்

படித்தளித்த வாழ்த்து.

**எண்டிசையும் புகழ் பண்டிதமணியே!**

மக்கட்குக் கல்விக்கண் இன்றியமையாத தென்பதை யுணர்ந்த தாங்கள் தமிழிலுள்ள இலக்கண நூல், இலக்கிய நூல், சமைய நூல் முதலியவற்றையும், வடமொழியிலுள்ள பலவகை நூல்களையும், இளம்பருவந்தொட்டு நெஞ்சம் ஏடென ஐயந்திரிபறக் கற்றுத் தேர்ந்து தமிழறிஞருள் தலைமைபெற்று இருமொழிப் புலவராய் விளங்குவதை நன் கறிந்த புலவர் பெருமக்கள் தங்களைப் "பண்டிதமணி" என்றழைப்பது மிகப் பொருந்துவதாகும்.

**கற்றுத் துறைபோய நற்றவக் குரிசில்!**

நகரத்தார்களின் தவப்பயனாகத் தோன்றி மதிநுட்பம் நூலோடுடைய தங்கட்குச் செய்யுளியற்றுந் திறனும், உரை

நடையெழுதும் உயர்வும் ஒருங்கமைந்தது போற்றத்தக்க தாம். கற்றாரும், கல்லாதாரும் ஒப்பவுணர்ந்து இன்புற்று வயப்படுமாறு இலக்கியச்சுவை ததும்பச் சொற்பொழிவாற்றுதலில் தங்கட்கு நிகராவார் இலர் என்பது அறிஞர்கட்கு ஒப்பமுடிந்ததே.

பல்கலைக் கழகப் பதவிகள் படைத்தோய் !

தாங்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராயமர்ந்து திறம்பெற ஆட்சிபுரிந்து, தனவணிகருள் முதன்முதலிற் பேராசிரியராயிருந்து வழிகாட்டிய பெருமை தங்கட்கே உரியதாகும். ஒரே காலத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும், சென்னைப் பல்கலைக் கழகத்திலும், திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்திலும் தமிழ்த் துறையில் தலைமை பூண்டு சீருற நடாத்திய தங்கள் ஆற்றல் வியக்கத் தக்கதாம்.

உமையொருபாகனை உள்ளத்திருத்தியோய் !

தங்கள் அறுபதாம் ஆண்டு நிறைவெய்துகின்ற இந் நன்னாளில் எம் மகிழ்ச்சிக்கு அறிகுறியாக அளிக்கும் இந்த அன்புரையை ஏற்றருளவேண்டுகின்றோம். தாங்கள் இன்னும் தமிழுக்கு வேண்டுவன புரிந்து எல்லா நலமும் பெற்றுப் பல்லாண்டு வாழுமாறு இறைவன் திருவடிகளை இறைஞ்சுகின்றோம்.

## தில்லைத் தமிழ்க் கழகம்

"நேற்றுமாலை 6-30 மணியளவில் புவனகிரி ஆவணப் பதிப்பாளர் திரு. சு. பூவராகன், B. A. அவர்கள் தலைமையில் தங்கள் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாக் கொண்டாடப் பெற்றது. இரவு பச்சையப்பன் பள்ளியில் பல ஏழை மக்களுக்கு உணவு அளிக்கப்பட்டது. அக் கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானம் வருமாறு" :—

"இன்று (12-10-41) இத் தில்லைத் தமிழ்க் கழகம் கழகத் தலைவராகிய உயர்திரு. பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவுச் சாந்தித் திருமணத்தைக் குறித்துத் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்வதோடு பண்டிதமணி யவர்கள்

தம் இல்லாளோடு நீண்ட நல் வாழ்வுபெற்று வாழ அருளுமாறு இறைவனை வேண்டுகின்றது.''

சிதம்பரம்,
13-10-'41.

நா. மு. மாணிக்கம்,
செயலாளன்.

## சிதம்பரம் ஸ்ரீ மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலை

இவ் வித்தியாசாலையில் பச்சையப்பன் உயர்தரப்பள்ளி ஆசிரியர் திரு. S. திருவேங்கட நயினர் B. A., L. T. அவர்கள் தலைமையில் தங்கள் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாச் சிறந்த முறையில் கொண்டாடப்பெற்றது. நிறைவேறிய தீர்மானம் வருமாறு :—

"முதுபெரும்புலவர் பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள் இன்று அறுபத்தோராம் ஆண்டு எய்தியது குறித்து இக் கழகம் உள்ளம் மகிழ்வதுடன் இது போன்ற பல விழாக்களை அவர்கள் இனிதின் அடைந்து தமிழ்த் தொண்டு புரிந்து நீடுவாழத் திருவருள் பாலிக்குமாறு எல்லாம் வல்ல இறைவனை மனம் ஒருமித்து வேண்டுகின்றது."

ப. முத்தையன்.

12-10-'41.

## பழநிச் சைவ சித்தாந்த சபை

"தமிழ் சம்ஸ்கிருதம் என்னும் இருமொழி வல்லுநரும், அண்ணமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியரும் ஆகிய உயர்சைவத் திருவாளர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களுடைய தமிழ்த் தொண்டும், சமயப் பணியும், பல ஆண்டுகளாகத் தமிழகமெங்கணுஞ் சென்று சொற்பொழிவாற்றித் தமிழ் வளர்த்ததும் குறித்து அன்னாருக்கு மேலும் நீண்ட வாணாளும் பிற நலங்களும எய்தும் வண்ணம் ஸ்ரீ ஞான தண்டாயுதபாணி சுவாமியை வந்தித்து அவர்க்கு நமது சைவ சித்தாந்த சபை தன் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகின்றது."

J. M. சோமசுந்தரம்,
தலைவர்,
ஈசான சிவாசாரியர்.

**புதுவயல் ஸ்ரீ சரஸ்வதி சங்கம்**

"தங்கள் அறுபதாம் ஆண்டு நிறைவுவிழாக் குறித்து இங்கே ஒரு பாராட்டுக் கூட்டம் நடந்தது. சங்கீத வித்வான் திரு. S. P. வீரப்பா தலைவராக இருந்தனர். தங்கள் பெருமையும் தமிழ்த் தொண்டும் பாராட்டப் பெற்று வாழ்த்துக் கூறப்பட்டது.

மெ. சிதம்பரம்,
காரியதரிசி.

**இளங்கோவடிகள் தமிழ்க் கழகம், கரந்தைப் புலவர்கல்லூரி**

"தமிழ் நலம் வளர்க்கும் தகைசால் பெரும!

"இளமைப் பருவந் தொடங்கி நலமிகு புலமைக் கலைத்திறத்தையே பெரும் பொருளெனப் பாராட்டித் தாய் மொழியாகிய செந்தமிழும், வடமொழியும் ஒருங்கு தேர்ந்து நுண்மாண் நுழைபுலங் கொண்டு அறிஞர் பலர் குழுமிய பேரவைகளில் மக்கள் உளமகிழ விரிவுரை யாற்றியும், வடமொழி நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தும், மாணவர்க்குத் தமிழறிவுறுத்தும் தாங்கள் தமிழ் நாட்டிற் குச் செய்துவரும் தொண்டினைத் தமிழரனைவரும் பாராட்டுங் கடப்பாடுடையர்."

"தமிழ் மொழி வளர்ச்சி ஒன்றனையே தமது வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டு தொண்டாற்றிவரும் தாங்கள், 'தங்கள் உள்ளத்தரும்பிய சுவைமலிந்த அறிவு நூற் கருத்துக்களையெல்லாம் எம்போன்ற தமிழ் மாணவர்க்கு எடுத்துரைத்து எல்லா இன்பங்களும் ஒருங்கெய்திப் பல் யாண்டு வாழ்க' என எல்லாம் வல்ல திருவருளை வணங்கி வாழ்த்துகின்றோம்."

த. முத்துரத்தினம்,
அமைச்சன்.

இந்துமத பாடசாலை வள்ளலார் மாணவர் இல்லம்.
வாலாஜாபாத்,
12-10-1941.

அறுபதாண்டு ............ பெருவிழாவை யொட்டி இங்கு எங்கள் மாணவர் இல்லத்தில் நிகழ்ந்த கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானம் ஒன்று நிறைவேறியது.

**தீர்மானம் :**

"செந்தமிழன்னையின் தவப்புதல்வர் உயர்திரு. பண்டித மணி மு. கதிரேசச் செட்டியாரவர்களுக்கு இன்று நடைபெறும் அறுபதாண்டு நிறைவுவிழா, பெருஞ் சிறப்புடன் மிளிரவும், அன்னார் பல நலங்களுடன் இன்னும் பல்லாண்டு புகழ்வாழ்வு வாழவும் அருள்புரிய இக் கூட்டம் தில்லைப் பெருமானை உள்ளமார வழுத்தி வழிபடுகின்றது."

தணிகையரசு,
இல்லத் தலைவன்.

**இளைஞர் ஒற்றுமைக் கழகத்தார், வேந்தன்பட்டி—கிளை**

"கடல் புடையுடுத்த இக் காசினி புகழும் கவியரசரது விளங்கு புகழ் விழாவினைப் புவியரசர் போற்றி விழைந்து வீறு கொண்டு நடாத்தப் போந்தது சாலப் பொருந்தும்."

"தென்மொழியிற் பலகலையும் திரிபின்றி
யாய்ந்தருளூற் செவ்வி யோர்ந்து
பொன்மொழியென் றெவரும்விரும் பப்புகன்று
மக்களுளம் புனித மாக்கி
நன்மைதரும் பொறைவாய்மை நல்லடக்க
முயர்சீல நாளு மோங்கித்
தன்மையெலாம் நிரம்புபெருந் தகையாள !
நின்னியல்பு சால நன்றே."

மெ. சுந்தரம்,
செயலாளர்.

## பசுமலை திருவாளர் S. S. பாரதியார் M.A.B.L. அவர்கள் கூறிய வாழ்த்து.

இன்பமும் அறனு மீயும் பொருளுமே பொருளா லெய்தும்
என்பதை வாழ்விற் காட்டி, இருநிதிக் கிழமை பூண்ட,
நன்பெருங் குடியர் நல்ல நகரத்தார் மரபிற் றோன்றி
மன்பதை உயர்த்துங் கல்வி மாட்சியை வளர்க்க வந்தோன்.

பொருளையும் பொருளா லாகாப் புகழையும் இருமை வாழ்வும்
மருளறுத் துதவுங் கல்வி வரம்புகண் டறிவுங் கூர்த்துத்

தெருளுறு புலமை தேக்கிச் செந்தமிழ் செப்ப னிட்டு
அருளுடை முனிவர் செய்த ஆரியம இரண்டும் வல்லான்.(௨)

கருவிலே திருவைக் கொண்ட கற்பக மென்னத் தோன்றித்
திருவினும் திருவே போல அறிவினும் ஒருவ னாகி
மருவிய புகழ்மை வேட்ட மகிபனன் றுமை லைமன்
தருவிலை யிலாத நட்பைத் தகவினு னுரிமை கொண்டோன்.

தொண்டுநூல் மலர்கள் எல்லாம்
    துருவித்தோய்ந் தவற்றின் தீந்தேன்
கொண்டுதான் சுவைக்கும் வண்டர்
    கொள்பவர்க் குதவும் கொண்டல்
பண்டித மணியாம் எங்கள்
    பருணிதன் கதிரே சன்சீர்
கண்டவாண் டாறு பத்தின் களிவிழாச்
    சிறக்க மாதோ. (௪)

மாவொடு மழுவுந் தாங்கும் வள்ளலின் அருளால் என்றும்
தானுவந் தன்பு பூண்ட சைவமுந் தமிழு மான
வானுய ரிசைமை வாழ்த்த வரம்பிலாண் டின்னும் வாழ்க
மானநன் கிளைஞர் வாழ்க வளம்வளர் ஆக்கம் ஓங்க. (௫)

வெள்ளகால் ராவ்ஸாஹிப்
## வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் G.B.V.C.,
கூறிய வாழ்த்து.

மகிபாலப் பதியில் வாழும் அண்ணல்
செட்டிநாட் டரசர் திலகம் போல்வான்
மூதறி வோர்புகழ் "முதுபெரும் புலவன்"
பண்டித மணிகதி ரேசப் பாவலன்
நிலவு சுக்கிர நீதி நன்னூல்
திகழு மண்ணியல் சிறுதேர்ப் பெருநூல்
சமயம் இலக்கியம் தம்பொரு ளாகக்
கொண்ட உரைநடைக் கோவை நூல்கள்
பிறபல நூல்கள் பெருவிருந் தாக
வண்டமிழ் வாணர்கூட் டுண்டிட வழங்கினோன்
கிளர்பல சபைகளிற் கேட்டார்ப் பிணிக்கும்
பெருஞ்சொல் வழங்கும் பிரசங்க சிங்கம்

மதிவள ரண்ணா மலைப்பல் கழகத்
தண்டமிழ்ப் பெருந்துறைத் தலைமை வகித்துப்
பேரா சிரியனாப் பிறங்கிய பெரியோன்
அகவை யறுபதாண் டான மானவன்
இன்னு மறுபதாண் டினுநெடுங் காலம்
எல்லாம் வல்ல இறைவன் அருளால்
உடற்றுன் புளத்துய ரொன்று மின்றி
இன்ப நலங்க ளெல்லா மெய்தி
வாழ்க வாழ்க வாழ்க மன்னோ.

## ஆசிரியர் திரு. அ. வரதநஞ்சைய பிள்ளையவர்கள்

உவந்து கூறிய வாழ்த்து.

சீர்மேவும் புவிமகளின் நுதற்றிலக
 மனையதமிழ்த் திருநாட் டோங்கும்
நீர்மேவும் வளப்பழனை முடித்தமகி
 பாலநகரி லிலைபெற் றென்றும்
பேர்மேவும் தனவணிக மரபுபுரி
 தவப்பேறு பிறங்கத் தோன்று
நார்மேவும் கதிரேசன் கதிர்வேலோ
 னருளாலெந் நாளும் வாழி. (க)

கடியார்க்கும் நறுங்கொன்றைத் தாரோன்பொற்
 கழலன்றிக் கருத்தொன் றோரா
அடியார்க்கு நல்லானச் சினார்க்கினிய
 னுயர்பேரா சிரிய னுய்ந்நிப்
படியார்க்கும் பொருள்விரிப்ப தரிதரிதா
 மெனக்கேட்போர் பகருந் தொன்னூன்
முடியார்க்கும் புகழ்ச்செந்நாப் போதனுங்
 கதிரேச முதல்வன் வாழ்க. (உ)

எடுத்துரைக்கும் பொழிப்பகல மெச்சநுட்ப
 மெச்சவிசைத் திடும்பேர் வாக்கி
யடுத்தவட மொழிப்பலநூன் மொழிபெயர்க்கு
 மறிஞன்றன் னடைந்து கேட்போர்
மடத்தைவிலக் கிடுங்கமகன் சைவநிலை
 நாட்டவல்ல வாதி *மாதின்

*மாதின் இடத்தவன் - மாதினையுடைய இடத்தோன்.

இடத்தவன்றாட் கமலமுள்ளத் திடத்தவனாங்
கதிரேச வேந்தல் வாழ்க.

வடமொழியுந் தென்மொழியாம் வாரிதியு
மகத்தடக்கும் வன்மை யானே
†குடமுனியும் பாணினியும் உருக்கொண்ட
ஒருவனெனக் கூறச் சில்லோர்
அடைவுறநுண் பொருளுணர்த்தாய்ந் துரைக்கும்வன்மை
யாலனந்த னாவா னென்பார்
கடவுளைப்போன் றேகனநே கனென்னவோ
கதிரேசக் கவிஞ! நின்னை. (௪)

‡நின்குலத்துக் குரியநறுந் தாருமலை
யுரிமையுளார் நேர்கற் பும்போல்
நன்குலவு பைந்தமிழ்நூ னயம்பலவு
நீயுரைப்ப நயந்து கேட்பான்
முன்குலவு புலவர்தங்கள் வாயுமுல்லை
யுடைத்தெனவே மொழியும் வாக்கோய்
பொன்குலவு மணிப்பூணூர் கதிரேசப்
பெருந்தகையாம் புலவோய் வாழி. (௫)

§சுடர்கால்விண் மணிமறைந்து தோன்றுமுத்தும்
வெண்மணியாம் சொல்லுங் காலைப்
படரொளிசா லேனைமணி களுமண்ணு
தமையாவாம் பார்க்கில் என்பார்
இடரறுசிந் தாமணிநற் றமிழ்ச்சிந்தா
மணிவிளங்க வீங்குன் னாலே

†குடமுனி பாணினி எதிர்நிரனிறை. இம் முனிவரிருவரும் ஓருருக் கொண்ட ஒருவன் என்பார் சிலர். வாக்கு விசேடத்தால அனந்தன் (ஆதி சேடன்) என்பார் சிலர். இவ்வாற்றால் கடவுளை ஏகன் அநேகன் என்றாற் போல்வதாயிற்று.

‡வணிகர்க்குத் தார் முல்லை. கற்புடைப் பெண்டிர் முல்லையுடையார் என்பர். கேட்போர் வாயும் முல்லைபோலும் நகைபெறும்.

§ விண்மணி - சூரியன். விண்மணி மறைந்துதோன்றும். முத்தும் வெண்மணி (அறிவற்றது). மற்றைய மணிகள் கழுவலால் ஒளிதருவன. சிந்தாமணி: (பார்க்கு இல் என்பார்) பூமிக்குக் கிடையாது என்பார்கள். தமிழ்ச் சிந்தாமணி நீ உரை விளக்க விளங்கும்: ஆகலின் நின்னை ஒத்த மணிகள் வேறில்லை.

திடமிகுபண் டிதமணியே கதிரேசா
நினக்குவமை செப்பற் கின்றே. (௬)

**மனவணிக ளுடற்கழகா வனவுயிருக்
கணியாக மாட்டா சொல்விற்
பனவணியே தருநகல்வி யுயர்சைவ
நூலுணர்ச்சி பரவக் கூடும்
தனவணிக குலதிலக பாண்டிமன்ன
ரேயலர்செந் தமிழை யேசார்ந்
தனவணிக ளெம்மரபு மறிந்துபுரக்
கின்றதெனச் சான்றுந் தோன்றல். (௭)

வாழிமகி பாலநகர் வள்ளல் கதிரேசன்
வாழி யுயர்பண் டிதமணியார்—வாழி
அறுபாறுண் டேபோற்பல் லாண்டுநனி வாழ
இறையோன் றிருவருளா னே. (௮)

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாசிரியர்

## திரு. ரா. கந்தசாமியாரவர்கள்

கூறிய வாழ்த்து.

திருமகள் நடீஇய குருநிற மேய
நெடியோன் அன்ன கடிபொழில் வளைஇய
தண்ணடை சிலச்சில விண்ணிடைச் சேடியொத்
தாருமை யாப்பச் சீருறத் தழீஇய
மகிபா லன்னகர் தகைபெற வந்தோன்
ஆன்றவிந் தடங்கிய சான்றவர் போற்றும்
திப்பிய குணத்தன் பப்பறு தமிழ்க்கடல்
ஆரிய மென்னும் பாரிரு கடல்களின்
கரைநனி கண்டவன் தரைபுகழ் பெருமைச்
சொல்லாய் புலவன் கல்லு முருட்டுப்
பாவ காரிகள் இவழிப் படரும்
உள்ளமும் உருக வின்னருஞ் சொற்பொழி
வாற்றும் புலவன் நோற்றல்சால் மாணவர்
மலக்கணந் துமிக்கும் இலக்கணத் தொகுதியும்
தத்துவப் பொருண்மையு மித்தலத் தோதும்
பண்டித மணியெனுந் தண்டமி ழாசான்
அறுபதாம் வருட நிறைவுநீ ராட்டு

** மனவு - மணிகளின் பொதுப்பெயர்.

மங்கலம் பெற்றே யிங்குநல் வாழ்வெய்தி
வாழ்கபல் லாண்டு வாழ்கபல் லாண்டெனா
ஏத்துகம் பொதுவிற் கூத்துகந் தானையே. (க)

திணை - பாடாண். துறை-வாழ்த்தியல்.

* அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் விரிவுரையாளர்

## திரு. A. சிதம்பரநாதச் செட்டியாரவர்கள், M.A.

கூறிய வாழ்த்து :

### சில தாழிசைக் கொச்சகக் கலிப்பா

உலகெல்லாம் அளிசெய்யும் உயர்மாரி யதுபோலப்
பலநூல்கள் பலாயிரர்க்குப் பரிந்தளிக்கும் பெருவேளாய்த்
தலத்திலுறு காவியங்கள் நயமுணரும் மதிநிரம்பிப்
புலவருள்ளே மணியாகிப் பூத்தமணப் பொன்மலராய்
நலஞ்சிறந்த மகிபாலப் பதியதனில் அவதரித்தோய் !

(இது தரவு)

மண்ணியல் சிறுதேரை மண்வியக்க அளித்திட்டாய்
கண்டிலார் காணவே சுக்கிரன்செய் நீதிதந்தாய்
கண்டேபோல் உரைச்செய்யுட் காலத்தில் ஈந்தனையே.

சிந்தைதான் மகிழவே சீரகப்பா நானூறுஞ்
சிந்தா மணியுடனே சிலப்பதி காரமிவை
நந்தா துரைசெய்தே நயம்பலகள் நவில்குவையே.

மாணிக்க வாசகர்சொல் மாணிக்க வாசகத்தை
மாணிக்கம் போலுரைக்கும் மாணிக்க மாமணியே
தாணுவின்சீர் நாடோறுந் தவிராதே ஏத்துவையே.

(இவை தாழிசை)

என வாங்கு,

(இது தனிச்சொல்)

நின்திறஞ் செப்பும் நின்பாற் கற்றேன்
இன்னும் நின்பால் இனியநூல் கற்கப்
பண்டித மணியே பாவலர் வேந்தே
இன்றுபோ மக்களொ டிருக்கபல் லாண்டென
எண்குணத் திறைவனை யிறைஞ்சுகின் றேனே.

(இது சுரிதகம்)

---

* இவ் வாழ்த்துப் பாடல் எழுதப்பட்ட பத்திரம் ஓர் வெள்ளிக் குழாயில் வைத்துக் கொடுக்கப்பெற்றது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாசிரியர்

## வித்வான். மு. அருணாசலம் பிள்ளையவர்கள்

கூறிய வாழ்த்து.

பூமேவு நான்முகனும் புனல்மேவு
  நெடுமாலும் புலவர் யாரும்
காமேவு வானவனும் கழல்மேவி
  வாழ்த்திவணங் கஞ்செய் யும்பைந்
தேமேவு நறுங்கொன்றைத் தெரியலான்
  அருள்மேவு செல்வன் செவ்வி
நாமேவு புகழாளன் நயமேவு
  பண்புநிறை நலங்கள் மிக்கோன். (௧)

வழுதிவள நாடுயர மகிபால
  நகர்விளங்க வயிர வன்றன்
பழுதறுதொல் கோயில்வகுப் பார்வணிகர்
  குலந்தழைப்பப் பலரும் போற்ற
எழுதரிய வடிவுடையாள் இயைந்தவளை
  ரொளிப்பெருமான் அருளால் ஈங்கு
முழுதுணருங் கலைஞானம் முளைத்ததென
  வந்துதித்த முதன்மை யாளன். (௨)

அன்னையெனத் தனையனுறும் அறிஞர்குழாத்
  திறைக்குதவி யாற்றுஞ் சீலன்
முன்னைநல வினையாலும் முயலுமாறு
  வலத்தாலும் முறையே கற்றுத்
தென்மொழியில் ஆரியத்தில் தெளிந்தபல
  நூலறிவு சிறக்கப் பெற்றோன்
மன்னுபொருள் நூலைமொழி பெயர்த்துத்
  தமிழணங்கின் வளப்புங் காண்போன். (௩)

கற்றவர்கள் நனிவியப்பக் கல்லாரும்
  உளங்கசிந்து கருத்துட் கொள்ளச்
சொற்செறிநற் பொருள்துளும்பச் சொன்மாரி
  பெய்துமயல் துடைக்குந் தூயோன்
குற்றமிலா துவர்நிறத்தால் கோதறவாய்ந்
  தெழுதுதலால் குறிக்கோள் வாய்ப்ப
உற்றுதவு சூழ்ச்சியினால் உலகியலொத்
  தொழுகுதலால் உயர்வொப் பில்லோன். (௪)

அரசண்ணு மலைவள்ளல் ஆக்கியபல்
கலைக்கழகத் தமர்ந்தெந் நாளும்
பரவுதமிழ்ப் பெருந்தலைமைப் பதவிபெற்றுச்
சென்னைமுதற் பகரும் பாங்கர்
விரவுறுபல் கலைக்கழகம் மேன்மையுறத்
தொடர்புகொளும் விறலோன் கல்வி
மரபினுயர் பண்டிதமா மணியெங்கள்
கதிரேச மதிவல் லோனே. (௫)

இன்னபெருந் தகையாளற் கிருமுப்பா
ணுண்டுநிறை வெய்து மிந்நாள்
பொன்வளரு நாள்கலைகள் பொலிவுறுநாள்
தமிழ்த்தாயின் புகழ்நாள் ஓங்கும்
அன்னவனும் கற்பினுக்கோர் அணியாய
மீனாட்சி யம்மை யாரும்
மன்னியநன் மங்கலநாள் ஆதலினால்
உளமகிழ்ந்து வாழ்த்து வேனே. (௬)

மக்களெலாம் புடைசூழ மங்கையர்பல்
லாண்டிசைப்ப மறையோர் வாழ்த்த
ஒக்கலிருங் களிகூரக் கவிவாணர்
புகழ்மாலை யுவந்து சூட்டத்
தக்கமணம் செய்தனன்னூ றுண்டுநிறை
விழாவுடனே தரணி தன்னில்
மிக்கநலம் பலவெய்தி யிறையருளால்
மேன்மேலும் விளங்கி வாழி. (௭)

திருவையாற்று அரசர் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர்

**கரந்தைக் கவியரசு திரு. R. வேங்கடாசலம் பிள்ளையவர்கள்**

கூறிய வாழ்த்து.

தமிழ்நாட்டின் தவப்பயனாய்த் தமிழ்த்தாயின்
முதன்மகனாய்த் தமிழர் வாழ்வாய்த்
தமிழ்மொழியின் வடமொழியின் தனிப்புலமை
சாரிடமாய்த் தமிழ்த்தீந் தேனைத்
தமிழ்மக்கள் எவ்வெவர்க்கும் தந்தருளும்
தனித்தாயாய்த் தழைத்து வாழும்

தமிழ்மணியே " கதிரேசத் " தனிமணியே
நின்பெருமை சாற்றற் பாற்றோ ! (க)

செட்டிநாட் டரசனெனத் திகழ்தமிழ்நாட்
டரசிவனைச் செப்பு மாறே
பட்டமெலாம் தவஞ்செய்யும் பண்பினனே
நினைச்சிலவாற் பகர்தல் அம்மா !
எட்டியநின் சொல்லாலே இரும்புலமித்
துணையெனயாம் இறும்பூ தெய்தல்
கட்புலஞ்சேர் வடிவதனாற் கதிரோன்றன்
அளவிதெனக் கணித்த லன்றோ ! (உ)

ஒருமொழியில் உளகலைகள் ஓராயுட்
காலத்தும் உணர்தற் காகா !
இருமொழியில் அங்ஙனுள எத்துறையும்
புகுந்துட்சேர் எழிலை யெல்லாம்
பெருகவுளங் கொண்டவற்றைப் பேணுநும்
கேட்டுணரும் பெற்றி நன்றிற்
றருநினது சொற்புலத்தைத் தனியறிவாள்
கலைமகளாந் தாயே யன்றோ ! (௩)

எங்கரந்தைச் சங்கவிழா இவனின்றி
யில்லையென இயல்வோன் யாவன்
பொங்குதொழில் பலவேனும் புறமாக்கி
ஆங்கருளைப் புரிவோன் யாவன்
தங்குதலை வனையிழந்த அதற்காறு
தலைச்செய்யும் தகவோன் யாவன்
நங்கள்திருக் "கதிரேச" நன்மணியான்
றேளந்த நாளும் வாழி ! (௪)

கல்விசிறி துடையோமால், கவிகளெனச்
செய்வோமால், கற்பா ருண்டேல்
ஒல்லும்வகை யுரைப்பேமால் எனுஞ்செருக்காம்
உமைமூன்றும் ஒருமூப் பானுப்
பல்குமென நாண்டிறைப் பள்ளிதனிற்
பயில்விக்கும் பண்பார் நண்பின்
நல்லவுயிர்த் துணைநின்னை நான்மறப்ப
தில்லையெந்த நாளும் வாழி !

உலகமெலாம் தனதரிய ஒளிதிகழப்
　　பெருநிதியம் உவந்தங் கீந்து
பலகலைய கழகமது படைத்தொளிர் "அண்
　　ணாமலைமன்" பண்பார் செம்மல்
தலைமையினில் திருவினரும் புலவர்களும்
　　தமிழ்க்கூடித் தனித்தொண் டாற்ற
இலகுறுமிவ் வாண்டுவிழா இணைவதுமொன்
　　றுண்டோமற் றென்றும் அம்மா! (௬)

வாழிதிரு மகிபாலப் பதியென்னும்
　　மாநகரம் வாழி வாழி!
வாழியதில் வாழ்வணிகர் முதலாய
　　மாண்குடிகள் வாழி வாழி!
வாழியநம் "கதிரேச" மாபுலவன்
　　பண்டிதநன் மணிதான் வாழி!
வாழியவன் மனை,மக்கள் வாழியநங்
　　கோ "அண்ணா மலையன்" வாழி! (௭)

மஹாவித்வான்

திரு. வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியாரவர்கள்

வர இயலாமை குறித்து
அனுப்பிய பாடல்கள்

தனமெல்லாம் உறப்பெருக்கித் தருமமெலாம்
　　செயும்நமது சாதி யான
இனமெல்லாம் சூழ்ந்திருப்பக் கவிராஜர்
　　பிரசங்கர் என்னும் வித்வ
சனமெல்லாங் குழுஉக்கொள்ள ராஜாசர்
　　வாழ்த்தெடுப்பச் சாந்தி கண்டாய்
மனமெல்லாம் ஊங்கனுப்பி உடற்பிணிக்குச்
　　சாந்திசெய்து வருகின் றேனே. (௧)

வஞ்சமில்லை கோபமில்லை பொறுமையில்லை
　　வெறுப்புமில்லை வருதற் காவல்
கொஞ்சமில்லை *மேகவா கனமுடையார்க்
　　கென்னையங்குக் கூட்டிக் காட்டும்

* மேக வாகனம்—கார்; மோட்டார்கார்.

நெஞ்சமில்லை சமீபமில்லை கால்நடக்க
முடியவில்லை நெடும்பாட் டுக்குப்
பஞ்சமில்லை யென்றாலும் மணியேமன்
னிப்பெனக்குப் பண்ணுறு வாயே. (௨)

அரியலூர் போர்டு ஹைஸ்கூல் தமிழாசிரியர்

**திரு அ. மு. சரவண முதலியாரவர்கள்**

கூறிய வாழ்த்து.

**ஆசிரியப்பா**

வம்மின் புலவீர் வம்மின் புலவீர்
அமமென் தமிழ்மொழி அரிது பயின்ற
செந்தமிழ்ப் புலவீர் நந்தமிழ மொழியாம
அந்தமில் கடலுள் அளவிலாண் டாகப்
படிந்து படிந்து பராவு நுண் பொருளெனும்
கடிந்திருள் அகற்றும் காமுறு பருமணி
எடுத்தெடுத் தருளும எம்பண் டிதமணி
வழுத்துயிர் புகழாளன் மாகதி ரேசன்
வடமொழி தலையாய மாசறக் கற்றோன்
மடமகள் இலக்கியம் வாலிதின் உணர்ந்தோர்
நூறுபேர் தம்முள் நுனித்தறி புலவர்
ஆறுபேர் தாமும் அகப்படல் அரிதாம்
அப்படிப் புலவர் அநேகரை எண்ணில்
செப்புவல் லமையுள் தேர்வோர் சிலரே
அன்னவர் தம்முள் அரும்பெருந் தலைமை
தன்னதாக் கொண்ட தகைசால் புலவன்
அருங்கலை யாய்தலை பெருங்களிப் பெனக்கொள்
இருங்கலை விநோதன் பெருங்குணை நீதன்
சிவப்பணி புரிதலே பவப்பிணி யொழித்தற்கு
ஆறெனக் கொள்ளும் வீறுசால் வணிகர்
குலத்துளோர் செல்வக் குறையிலார் எனினும்
நலத்தகு கலையுள் நன்னர் நுண் மாணுழை
புலமுளோர் அரியரென் பூரிய குறையை
வலமுடன் ஒழிக்க மாநிலத் துதித்தோன்
செறிவும் இறைகழல் சேர்வதும் தெரிக்கும
அறிவுநூல் பலவும் ஆய்ந்தறி வோர்கள்
இலக்கியச் சுவையை ஏமுறக் காணார்

நலத்தகும் இலக்கிய நன்சுவை யுணர்வார்
பன்னும் ஞானநூல் பாங்குறப் பயிலார்
என்னுங் கருத்தை யியைவுற றொழித்தோன்
ஆங்கிலங் கல்லா தருந்தமிழ் கற்றோர்
ஓங்குயர் பள்ளியின் ஒருதனிப் பகுதிக்கும்
தலைமை வகிக்கும் தகுதியி லாரென்
புலமைசார் விதியைப் புறங்காண் வீரன்
வெள்ளி நீதியாம் ஒள்ளிய நூல்முதல்
எள்ளல் இல்லா இன்சுவை செறிந்த
நூல்பல வற்றைச் சாலவும் உதவியோன்
வாழ்மலி பால வளநகர் வதிவோன்
அன்னவன் அறுப தாண்டு நிறைவு
துன்னிய விழாவாம் என்னே புதுமை
அந்நிறை வவற்கோ அவன்கூர் மதிக்கோ
நன்னெறி காட்டும் நலங்கூர் சொற்கோ
செம்மை பழுத்த செழும்புல மைக்கோ
அறியேம் எதற்கென அனைத்தின் முதுமையும்
சிறியேம் வாழ்த்தும் செயற்குரி யதுவே
பாவலர் நாவலர் காவலர் முதலா
யாவரும் போற்றும் அன்னவன் வாழ
அருந்தமிழ் வாழும் அதன்மாண் போங்கு
விருந்துறு புலவர் மிகப்பலர் ஆகி
வாழ்வர் புலமையும் வாழைக்கீழ் வாழையாய்த்
தாழ்வறுத் தோங்கும் தகுதிகூர் புலவீர்
ஆதலால் அவன்றன் அளவில்பல் நலங்களும்
கோதிலா இறைவன் குறைவிலின் அருளால்
பெற்றனன் கிளையொடும் பிறங்குநூல் பலப்பல
கற்றுநன் னெறிபடர் கான்முளை பலரொடும்
வாழ்கபல் லூழி வாழ்கபல் லூழி
வாழிய என்றே பாழியார் மறலியைக்
காய்ந்தருள் தோய்ந்த கழலடி நினைந்து
தோய்ந்து வாழ்த்தித் தொழுவோம் யாமே.

தூத்துக்குடி சித்தாந்த ஆசிரியர்

## திரு ந. சிவகுருநாத பிள்ளையவர்கள்

கூறிய வாழ்த்து.

எண்டிசையும் புகழ்மணக்கும் இனியதமிழ்
வடமொழியோ டிலங்கக் கற்றுப்
பண்டிதமா மணியென்னப் பாவலரும்
நாவலரும் பகர்ந்து போற்றக்
கண்டினிலு மின்சுவையாய்க் கருத்தினுக்கோர்
நல்விருந்தாய்க் கவியி னாலும்
மண்டுபொரு ளுரையாலும் மண்டலத்தோர்க்
கிதமுரைக்கும் மணியே வாழி. (க)

நதிபொதிசெஞ் சடையண்ணல் நவின்றவா
கமப்பொருளின் நலந்த தாய
கதிநிலவும் சித்தாந்தக் கல்வியுடன்
திருமுறையுங் கருத்தி லோர்ந்து
பதிநிலையும் எண்ணரிய பசுபாச
நிலைகளையும் பகர்ந்து பாரோர்
முதுநிலையாஞ் சிவானந்தக் கடல்படியும்
படிசெய்யும் மொய்ம்ப வாழி. (உ)

மண்ணுலகுக் கோரணியாம் மகிபாலப்
பதியில்வளர் மகிப வாழி
கண்ணுதலோன் கண்மணியாங் கதிரேசப்
பேர்கொள்பெருங் கலைஞ னன்றன்
நண்ணுமறு பானாண்டு விழாச்சிறந்து
நலமல்க ஞால மீன்ற
பெண்கொடியாம் வடிவுடையாள் திருவருள்போற்
பிறங்கியென்றும் வாழி வாழி. (௩)

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாசிரியர்

## திரு ஆ. பூவராகன் பிள்ளையவர்கள்

கூறிய வாழ்த்து.

சீராருந் தமிழன்னை செய்தவத்தின் நற்பயனைப்
பாரோர்கள் புகழ்மகி பாலநகர் வந்துதித்தோய்
நீரேறு சடைப்பெருமான் நீள்கழல்சேர் திருவுளத்துப்
பேரான கதிரேசன் எனும்வாழில்கொள் பேரானை. (க)

செந்தமிழும் ஆரியமும் சிறப்புறநன் காய்ந்துணர்ந்து
புந்திவிருந் தெனத்திகழும் புதுநூல்கள் பலவியற்றி
முந்துதமிழ் நனிவளர முயன்றுசெயல் புரிந்திடுவோய்
அந்தமிலா நின்புகழை யளந்துரைத்தல் இயலுவதோ.

புலவர்களுக் குறுதுணையாய்ப்
புலமைமிக்கோர் நிலைக்களமாய்
அலகில்பல நூற்பொருள்கள்
ஆய்ந்துரைக்கும் அருமணியே
நிலவணியுஞ் சடைப்பெருமான்
அருளாலிந் நீணிலத்துப்
பலநலமும் நிறைவுற்றுப்
பல்லாண்டு வாழியவே. (௩)

## யாழ்ப்பாணம் ஸ்ரீ J. T. சதாசிவ ஐயரவர்கள்
(District Inspector of Schools)

கூறிய வாழ்த்து.

சைவந் தழைக்கத் தமிழ்தழைக்கத்
தரணி புகழா ரியந்தழைக்க
மெய்வந் திடுசொன் மறைதழைக்க
மேவித் தழைத்து விளங்குகல்வி
கைவந் திடுபே ராசிரியன்
காட்சிக் கினியன் கற்பவர்தாம்
உய்வந் திடநூ லுரைபகர்வோன்
ஓங்கு கதிரே சப்பெயரோன். (௧)

பாரிற் சென்று பலவிடத்தும்
பருத்த நிதியம் பண்ணிமெழு
காரிற் கொடைசெய் தனவசியர்
கனஞ்சேர் குலத்து வந்துதித்தோன்
சீரிற் றிகழுந் தமிழகத்துச்
சென்று பரந்த புகழாளன்
நாரிற் கதிரே சனைநாளும்
நன்கு பணியும் நலமுடையோன். (உ)

## வேறு

செட்டிநாட் டரசாம் அண்ணா
 மலையெனும் செல்வச் சீமான்
மட்டிலௌ தாரியத்தால் வளர்ந்தஅண்
 ணாமலைப்பேர்ப்
பட்டிமண் டபம தென்னும்
 பல்கலைக் கழகந் தன்னில்
கட்டியும் கரும்பு மென்னக்
 கலையமு தூட்டும் ஆசான். (௯)

## கட்டளைக் கலித்துறை

சிந்தா மணிமுதற் சேர்கா வியமணி செந்தமிழ்க்கு
நந்தா மணியெனுந் தொல்காப் பியப்பெயர் நாமணியும்
சிந்தா மணியாய்த் திகழ்தரும் ஆரியத் தேமணியும்
மூந்தார் மணித்தொடை பண்டித மாமணி மொய்ம்பினவே. ௧௦

## வெண்பா

மட்டில் தமிழ்ப்புலமை வாய்ந்த கதிரேசச்
செட்டியார் நாளுஞ் சிறந்தோங்கி—முட்டிலா
தின்றுபோ லென்று மினிதிருக்கச் செய்வனருட்
குன்றுபோ னின்ற குகன். (௫)

மதுரைத் தமிழ்ச் சங்கக் கலாசாலை ஆசிரியர்

### திரு. சு. நல்லசிவன் பிள்ளையவர்கள்

கூறிய வாழ்த்து.

நாவலம் பொழில்சூழ் நந்தமிழ் நாட்டில்
 நாலிரு திசையும்நன் கியம்பும்
பூவலர் தெய்வக் கற்பக நாட்டுப்
 பொன்னக ரேயிவண் போந்து
பாவலர் புகழும் எழில்மகி பால
 நகரமென் றொருபெயர் படைத்து
மேவர விளங்கும் என்பர்மெய் யுணர்ந்த
 வித்தக ரிவ்விய னகரில். (௧)

மன்னர்பின் னோரென் றுரைபெறு நகர
வணிகர்நன் மரபின்மா மணியாய்த்
தென்னர்தந் தமிழும் வடசொலுந் தெளிந்த
சிரியன் ஆரிய மொழியிற்
பன்னரும் பன்னூல் தென்மொழி யாக்கிப்
பாரினுக் குதவிய பண்போன்
கன்னலின் அமிழ்திற் சொற்பொழி வாற்றிக்
காசினி யவருளங் கவர்வோன். (உ)

செந்தமி ழண்ணா மலைநகர் தனிலத்
திருப்பெயர்ப் பல்கலைக் கழகத்
தைந்திர மனைய தமிழிலக் கணநூ
லாதிய மாணவர்க் கன்பாற்
றந்திடு பேரா சிரியனென் றுலகஞ்
சாற்றிடும் பண்டித மணியாம்
முந்திரு பொருளு மிகுகதி ரேச
முத்தமிழ் மறைபொழி முகிற்கு. (ங)

செய்யஆண் டறுபா னிறைவுறு சாந்தித்
திருமணஞ் சிறப்புறப் புரிந்தார்
வையமீ யிறைஞ்சும் வடிவுடை யம்மை
மருங்குறு வளரொளிப் பெருமான்
மெய்யரு ளினைமுற் கொண்டுநல் யாண்டு
விஷுபுரட் டாசியாந் திங்கள்
உய்தரும் இருபா னொறெனுந் திகதி
யுதயபா னுவினுயர் வாரம். (ச)

செப்புயிற் பக்கச் சத்தமி திருவா
திரைசித்த யோகம்வில் லோரை
இப்புவி துதிநன் னளினிற் றந்தைக்
கெழில்மகா ராற்றுத வியினைச்
சுப்பிர மணியக் குரிசிலென் றுரைசால்
தாயனும் அவன்பின னுதித்த
ஒப்புறு கனக சபாபதி நாம
முற்றிடு வேளும்நன் குவந்தே. (ரு)

### நேரிசை வெண்பா

ஆண்டறுபான் பூர்த்தி யடைந்தகதி ரேசமுனில்
ஈண்டுமனை மின்னுடனே யிரைம்ப—தாண்டின்

அபிடேக முங்கொண் டவனிமிசை வாழி
அபிடேக வல்லியரு ளால். (சு)

இவ்வேள் புதல்வன் எனுஞ்சுப் பிரமணியச்
செவ்வேள் பெயர்புனைந்த சீமானும்—மெய்வாய்
கனக சபாபதிப்பேர்க் காவலனும் வாழி
தனதனுயர் செல்வம் தழைத்து. (எ)

சுபம்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் "செந்தமிழ்" உதவி ஆசிரியர்

## திரு. T. K. இராமாநுஜ ஐயங்கார் அவர்கள்

கூறிய வாழ்த்து.

திருமக ளுறையுள் எனப்பல வளமும்
திகழ்மகி பாலநன் னகர்வாழ்
மருவுசீர் வணிகர் மரபினிற் சீர்த்தி
வளர்முத்துக் கருப்பவேள் தவத்தில்
பொருவரு தமிழும் ஆரிய மொழியும்
பொற்புறப் புலவர்பற் பலரும்
கருதிய வனைத்தும் எய்தினர் மகிழ
வருகதி ரேசநற் கலைஞ! (க)

மற்றுநீ தமிழ்த்தாய் உவந்திட உலகம்
வாழ்த்திட அறுபதாம் வயது
முற்றுறப் பெற்று விளங்குமிந் நாள்போல்
முத்தமிழ் வாணர்தங் குழுவும்
சுற்றமுந் துணையும் மக்களும் உயிரிற்
றுன்னிய நண்பருஞ் சூழக்
கொற்றவர் மதிக்க வாழிபல் லூழி
குவலயத் தருந்தமிழ் வளர்த்தே. (உ)

மதுரை செண்ட் ஜோஸப்ஸ் ஹைஸ்கூல் தமிழாசிரியர்

## வித்வான் S. ஆழ்வாரையங்கார் அவர்கள்

கூறிய வாழ்த்து.

பூமகள் முகனேர் ஆமெனப் புலவர்
பல்லோர் புகழுந் தொல்பெருஞ் சிறப்பார்

மகிபா லப்பெயர் மாநகர் வந்தோய் !
எல்லாக் கதிரும் ஏயுந் திறத்தால்
கதிரே சப்பெயர் பதிவுறப் பெற்றோய்
பெரும ! நீயே அருமைச் செந்தமிழ்
ஆரிய மென்னும் பேரியன் மொழிகளிற்
சார்ந்தபன் னூற்பொருள் தேர்ந்து நுண்ணிதிற்
சீரிய கூரிய செஞ்சொலி னெடுத்துப்
பண்டிதர் பாமரர் கண்டுதீந் தேனென
வியக்கநன் குரைக்கு மேதகு மதியினை !
அண்ணா மலைப்பெயர்க் கண்ணியக் குரிசில்
அரும்பெரும் பொருளால் விரும்பிச் சிதம்பரம்
நிறுவிய பல்கலைக் கழகம் நேர்ந்தாங்
குயரிய மாணவர் மயர்வறப் பன்னூல்
ஆய்ந்துரைத் தேசிர் வாய்ந்தனை ; அன்றால்
சென்னைப் பல்கலைக் கழகஞ் செவ்விய
திருவனந் தபுரஞ் சேரும் பல்கலைக்
கழகம் இவற்றினும் அழகிய தானம்
உற்றனை ; வள்ளல் நற்றவத் தோயே !
இன்னுநின் னருஞ்செயல் மன்னிய பலவே
விஷுபுரட் டாசி விளங்கு ஞாயிறு
கிருட்டின பக்கங் கிளருஞ் சத்தமி
திருவா திரைநாள் சித்தயோ கஞ்சேர்
இந்நன் னாள்நீ பன்னிய வறுபதாண்
டினிது நிறைந்தே இலங்கிடற் குச்செயும்
சாந்தித் திருமணம் சார்ந்தயாம் உற்ற
இன்பம் பெரிதஃது எம்ம னோரால்
சாற்றுதற் கரிதே ஆற்றலோய் நீயே
ஆடகக் குடுமி மாடக் கூடல்
வையை யாற்று மணலினும் பலவாய்
ஆயு ளமைந்து மேயபல் கிளையொடும்
வாழி வாழியிம் மண்மிசை யானே.

## திருச்செந்தூர் திரு. மு. கிருஷ்ணசர்மா அவர்கள் கூறிய வாழ்த்து.

பண்டி தர்க்கு மணிக்கதி ரேசனே
பாவ லோரொடு நாவலர் நேசனே

தொண்டு செந்தமிழ்க் குப்புரி தூய்மையோய்
சொற்பெ ருக்கிட ஊக்கங்கொள் வாய்மையோய்
தண்டு பண்பினம் ஒத்துப்பல் தீர்ந்தனை
சாந்தி யாம்உருக் காந்தியை நேர்ந்தனை
பண்டை மாமறை சொல்லொரு நூறுமே
பாரில் வாழென இச்சபை கூறுமே. (க)

(தண்டு பண்பு இனம் - கைத்தண்டம் குணம் குலம்)

ஓது விக்கும் குருவின்றி ஆய்ந்துளாய்
உரைபெ யர்க்குந் திறன்மிக வாய்ந்துளாய்
வாது செய்வதற் குள்ளம் விரும்புவார்
வழிக்கு வந்துனைக் காணிற் றிரும்புவார்
கோதில் வைசியர் தம்பெரு நாட்டிலும்
கூறு செந்தமிழ் நாட்டும்நிற் காட்டிலும்
தாது சேர்ந்து மணங்கமழ் முல்லையே
தாம ணிந்தவ தொண்டர்கள் இல்லையே. (உ)

கண்க வர்பள்ளி தாம்பல கண்டவன்
கல்வி யேபெரி தென்றெங்கும் விண்டவன்
திண்கொள் ஞானம் தருவன நூற்பல
தேரும் பண்டித மாமணி போற்பல
வெண்க லத்திலும் வெண்சிலை தன்னிலும்
மேலை நாட்டுப் பளிங்கிலும் பொன்னிலும்
பண்கொ ளும்சிலை கண்டெங்கும் நாட்டுவோம்
பாரில் எங்கும் அவன்புகழ் காட்டுவோம். (ங)

கூறி யுள்ள வடகலை தென்கலை
கூடி ரண்டிற்பல் லாயிரம் நன்கலை
தேறி யுள்ளவன் காவியம் யாவையும்
தேர்ந்த வன்தமிழ்ச் சங்கத்துப் பாவையும்
மாறு கொள்கையர் தம்மிடைச் செம்மையே
வாய்க்கப் பேசி உறுவிப்பர் நன்மையே
நூறெ னச்சொலும் ஆண்டவன் உய்குக
நுண்க ருத்துறு நூல்பல செய்குக. (ச)

*வருண வாதியர் தம்மை வெறுக்கிலான்
மாற்றக் கொள்கை நலனும் மறுக்கிலான்

---

*வருண வாதியர் - சாதிப் பித்தர். மாற்றம் - சீர்திருத்தம்.

அரிய செந்தமிழ்ச் சீரெங்குஞ் சொல்லுவன்
ஆரி யத்திடைக் கண்டுமுட் டில்லவன்
பொருள்இ லக்கங்கள் உள்குலத் துற்றவன்
புலன்கொள் நூலொடு கோடியும் கற்றவன்
தெருளு றுங்கதி ரேசனெனார் நூறுமே
சேர வாழ்ந்து பெறுகபல் பேறுமே. (௫)

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாசிரியர்

## திரு. E. S. வரதராஜ ஐயரவர்கள் B.A.

கூறிய வாழ்த்து.

தென்மொழி தேர்ந்து வடமொழி
நூல்கள் தெளிந்தெவர்க்கும்
நன்மொழி கூறும் நயனார்ந்
தவையோர் நனியுவப்பப்
பொன்மொழி கார்போற் பொழிதிறன்
பூண்டு புலமிகுந்தோர்
முன்மொழி வீர கதிரேச
ஞான முழுமணியே. (௧)

வற்றாத கல்வி வளப்புமுயர்சொல் வளமுமுறை
யுற்றாய் புலனும் உடையா னிவனை உயர்மகவாப்
பெற்றார் புரிந்த பெருந்தவம் யாதெனப் பேசநின்ற
நற்றார் வணிக "கதிரேச" பண்டித நாயகமே. (௨)

ஒருமணி ஞான மொளிர்மணி வைசியர் ஒண்மரபின்
வருமணி ஞால மகிழ்மணி கற்று வளர்புலவோர்
குருமணி கோதில் குணமணி செந்தமிழ்க் கோமகட்கண்
கருமணி சீர்சால் கதிரேசன் பண்டிதர் கண்மணியே. (௩)

### வெண்பா

மூப்பா னிரட்டி யகவை முடித்துயர்ந்தாய்
இப்பார் புகழ்புலமை யெய்தினாய்—ஒப்பாரில்
பண்டித மாமணியே பல்லாண்டு வாழ்கநீ
தண்டமிழா சானெனவே தான். (௪)

வாழிமனை மக்களொடு மாண்பார் கதிரேசன்
வாழி தமிழணங்கு வாழியரோ—ஆழிசூழ்
தாரணியிற் றொல்கேள்விச் சான்றோர் தமதுவழி
ஆரணங்கோர் பாகனரு ளால். (௫)

சிதம்பரம் மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலைத்

## தமிழாசிரியர் திரு. ப. முத்தையா பிள்ளையவர்கள்

கூறிய வாழ்த்து.

அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா

சிறப்புறுநன் முறைமையினாற் றிருவுடனின் பழமையைந்தே
அறத்தின்வழிப் படுமுறைமை யறிந்தொழுகு தனவணிகர்
விரும்பியுறை தருநகருண் மிகுவளமும் மனையறமும்
அரும்பிவளர் மகிபால அணிநகரம் பொலிவுபெற
முத்துக்க ருப்பமுகில் முயன்றவருந் தவப்பயனால்
எத்திக்குந் தொழுதேத்த வெழுங்கதிரே சப்பெரியோய்.

(இது தரவு)

தண்டமிழி னுயர்தரமாத் தயங்குகலை நுனித்துணர்ந்து
கண்டினுந்தே னினுமினிப்பக் கவிநூரகங் களிதுளும்ப
எண்டிசையும் விரித்துரைத்தே யிசைபரப்பி வருநின்னைப்
பண்டிதமா மணியென்னப் பகர்வதுவு மியல்பாமால்.

விதியருளு மறைப்பொலிவான் விளங்குவட
மொழிப்பொருளால்
மதிவலத்தாற் பெயர்த்துநய மருவவரைந்
தெமைப்போல்வார்
கதியாகித் தலையளிசெய் கவியரச !
அறிஞர்நினை
முதியபெரும் புலவனென மொழிவதுவு
முறையாமால்.

உலகுபுக ழிருநிதிக்கோ னுயரண்ணு மலைக்குரிசில்
அலகிலரும் பொருட்குவையா னமைத்தருள்பல் கலைக்கழகத்
திலகுதமிழ்ப் புலவரவை திறம்பெறநற் பணிபுரிந்து
நிலவுநினைத் தலைவனென நிறுவியதுந் தகவாமால்.

(இவை மூன்றுந் தாழிசை)

அரசினர் மொழிப்புல மடைந்து ளோர்களுந்
தெரிதமி ழிலக்கியந் தெளியச் செய்தனை ;

பொருள்பொதி கட்டுரை புதினத் தாள்களில்
மருளற விளக்கியுண் மகிழ மாண்பினை.

(இவை நாற்சீரடி இரண்டம்போதரங்கம்; பேரெண்)

புதுமைகொள் வானொலிப் பொருவில் பேச்சினை ;
துதிகொள்வெண் ணீறுமெய் துலங்கு பூச்சினை ;
கதுமென நயம்பெறு கவிகள் ஆக்கினை ;
மதிவலங் கொண்டுறு மதுர வாக்கினை.

(இவை நாற்சீர் ஓரடி நான்கம்போதரங்கம்; அளவெண்)

சீர்பெருகத் தோன்றினை நீ
சிவனைமனத் தூன்றினை நீ
பேறுபல பெற்றனை நீ
பெருந்திருநோக் குற்றனை நீ

(இவை முச்சீர் ஓரடி நான்கம்போதரங்கம்; இடையெண்)

பண்பன் நீ நண்பன் நீ
பாவலன் நீ நாவலன் நீ
அன்பன் நீ இன்பன் நீ
அறிவன் நீ தெரிவன் நீ

(இவை இருசீர் ஓரடி எட்டம்போதரங்கம்; சிற்றெண்)

எனவாங்கு,

(இது தனிச்சொல்)

இன்னன குணங்கொளெம் ஏந்தல்நிற் புகழ்குதும்
மன்னிய செல்வ வாழ்வினாண் டறுபான்
நிறைவுறு விழவில் நிகழ்த்துவ விதிமுறை
குறைவற அந்தணர் குழுமியாங் கியற்றவும்
செந்தமி ழறிஞர் சேர்ந்துவாழ்த் தெடுப்பவும்
மைந்தருஞ் சுற்றமும் மகிழ்ந்துகண் களிப்பவும்
கருத்திற் கிசைந்த காதலி யாரொடு
திருத்தமார் மங்கலச் செயலினை முற்றி
எண்பா னாண்டின் இயற்று விழாவும்
பண்பா னடாத்தியப் பானா றாண்டு
மங்கையோர் பாகன் மலர்திரு வருளாற்
பொங்கிய நலம்பல பொருந்திவாழ் கெனவே.

(இது சுரிதகம்)

சென்னை லயோலா காலேஜ் தமிழாசிரியர் வித்வான்
### திரு. E. K. நடேச சர்மா அவர்கள்
கூறிய வாழ்த்து.

கற்பவை கற்றுக் கேட்பவை கேட்டு
விழுப்பஞ் சான்ற வொழுக்க மோங்கித்
தாங்கரு மரபிற் றமிழின் கிழவனாய்
அவைதொறு மவைதொறும் நகைமிகு நவையில
அமிழ்தினு மினியன வளப்பில் மொழிகளை
வறியவர்க் குதவும் வள்ளியர் மான
மகிழ்ந்து வழங்கி மகிழவுங் காண்பை
"காறு காவன் றுவிற் பேசுவர்
புலவர் என்றோர் புன்மைத் தன்மையை
மனமலைப் பேட்டையில் மறுத்துக் கூறினை
இருமொழி பயின்ற இரும்பயன் இதுவெனக்
கூறினும் கொள்வரோ கூர்மதித் தமிழர்
அமலன் அருளா லறுபது முற்றினை
"யாதும் ஊரே யாவரும் கேளிர்"
என்றே மொழிந்த எழிற்பூங் குன்றன்
நாட்டினிற் றோன்றிய நாவல றுதலின்
சமநிலை கொண்டு சாம்பன் மலரடி
நிச்சலும் நினைந்து நீரக மீமிசை
மதியமும் ஞாயிறும் போல
மன்னிக் கன்னித் தமிழினைப் புரக்கவே.

கொப்பனாப்பட்டிக் கலைமகள் கல்லூரித் தமிழாசிரியர்
### திரு. ரெ. இராமமூர்த்தி ஐயரவர்கள்
கூறிய வாழ்த்து.

வாழி மகிபால மாபுரியு மாதிரையும்
வாழி கதிரேச மாமணியும்—வாழியரோ
சேரர்ந்த நற்குலமுஞ் சேருமயி லேகமுமே
பேரார் சிவனருளைப் பெற்று.

பள்ளத்தூர் ஹைஸ்கூல் தமிழாசிரியர்
## திரு. மு. முத்துவேங்கடாசலம் ஐயரவர்கள்
கூறிய வாழ்த்து.

காசினி புகழும் கன்னிநாட் டுயரும்
மகிபா லப்பெயர் மாநகர் மகிப !
வயிரவன் கோயில் மன்னிய சைவம்
உயர்ந்திடு குடியில் உதித்தநற் பெரும !
அமிழ்தினு மினிய தமிழ்மகள் தனக்குக்
கதியா யுதித்த கதிரேச வள்ளால் !
பாவலர் புகழும் பண்டித மணியே !
தமிழர் நாடு தகவொடு துதித்த
முதுபெரும் புலவ ! முன்னரும் இசையோய் !
ஆரியக் கடலும் அருந்தமி ழளக்கரும்
நிலைகண் டுணர்ந்த புலமிகு நுரிசில்
செட்டிநாட் டரசர் செகமெலா மேத்தத்
தருகலைக் கழகத் தமிழ்த்துறை யதனில்
பேரா சிரியப் பெரும்பொறை யேற்று
மனச்சுருள் நீக்கி மலர்விக் குங்கலை
மாணவர் தமக்கு மகிழ்வுட னூட்டினை
அருந்தமி ழாசி ரியனை யுறப்
பாரது புகழும் பன்னூல் அளித்தனை
மேதினி தானும் விரைந்துதொழில் கேட்க
நிரந்தினிது சொல்லும் சிறந்தநன் மதியோய்
விசுவெனும் வருடம் மேதகு கன்னி
இருபா னாறில் எழில்மிகு ஞாயிறு
ஆதிரை யாகும் அருஞ்சுப தினத்து
மறையவர் சூழ்ந்து மாமறை கூறப்
பாவலர் முத்தமிழ்ப் பாட லிசைக்கக்
கருங்கட் செவ்வாய்க் கன்னியர் குழுமிக்
கீத மிசைத்திடு நாதம் பயில
மங்கல இயங்கள் எங்கு முழங்க
அறுபா னாண்டு நிறைவெனு மணிவிழாக்
கொண்டு விளங்கினை மண்டிய இசையோய் !
மக்களொடு மகிழ்ந்து மனையறங் காத்துப்
பொன்மணி நிலன்முதற் பொருளெலா மடைந்து
மேலாம் நூறாண்டு விழாவு முற்று

வாழிநீ டூழி வாழியர் என்னச்
சிற்சபை தன்னிற் பொற்பொடு நடமிடும்
அம்பல வாணன் அடிமலர்
இதயத் திருத்தி இறைஞ்சுதும் யாமே. (க)

### வெண்பா

புலியரசர் சூடப் பொலிதரளம் தன்னைக்
கவிஞர் சுவாதிதரக் கண்டு—கவியரசர்
சூடக் கதிரேசத் தூயமணி நல்கியதால்
நாடுபுகழ் "ஆதிரையாம்" நாள். (௨)

நாவலர்சீர்ச் செந்தமிழ்சேர் நாட்டுக் கலைஞர்மணி
காவலர்கள் போற்றும் கவிஞர்மணி—பூவுலகில்
வாழிகதி ரேசமணி மக்கள் மனைவிகிளை
வாழிநீ டூழி வளர்ந்து. (௩)

திருவாவடுதுறை ஆதீனவித்வான்

## திரு. தே. பெரியசாமிப் பிள்ளையவர்கள்

கூறிய வாழ்த்து.

மாமேவு மலர்ச்சோலை மகிபாலப் பதியில்
வயிரவன்கோ யின்மரபின் வணிகர்குல திலகன்
தேமேவு புகழ்முத்துக் கருப்பவேள் தவத்தில்
சிறந்ததலை மகனாகுஞ் சிவஞானச் செம்மல்
காமேவு கொடைத்தடக்கைக் கதிரேசன் ஐயா
கலாநிபுணன் பண்டிதமா மணியறுப தாண்டில்
பூமேவு சாந்திமணம் மீனாட்சி யுடனே
விதிமுறையே கொண்டனனால் விளங்குக பல் லூழி.

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

## திரு. மாணிக்கத் தியாகராஜ பண்டிதர் அவர்கள்

கூறிய வாழ்த்து.

சீரோங்கு தமிழ்நாடு செய்தவத் துற்றமணி
செட்டிநாட் டொளிர்மா மணி
செய்யமுத் தமிழ்ச்சக்ர வர்த்திமணி ராஜமணி
சேர்அண்ணா மலையா மணி

தில்லையிற் பல்கலைக் கழகத் தனிப்பெருமை
தினமோங்க வாற்றும் மணி
திகழ்தலைமை பூணநிகழ் உயரறுப தாண்டுமணஞ்
செய்துமகிழ் வுறுமா மணி

பேரோங்கு கவிராசர் புவிராசர் மகராசர்
பேணுபுகழ் பெறுமா மணி
பிரபலத் தனவணிக குலதிலக மானமணி
பெருமன்னர் மனமா மணி
பெற்றவர்கள் உற்றவர்கள் கற்றவர்கள் மற்றவர்கள்
பெரிதுவப் புறுமா மணி
பிரசங்க மாரிபொழி மணியறிஞ ருள்ளமிசைப்
பிரியாது வளர்மா மணி

ஏரோங்கு மதனவுரு வெய்துமணி யேழைகளை
இனிதுகாத் தருள்மா மணி
எம்மொழி புகன்றாலும் அம்மொழி யிடத்தினிமை
எய்தவுரை செய்மா மணி
எந்நாளு மென்னைநினை விற்கொண்டு பாராட்டி
இலகுசவை சொல்மா மணி
* எம்மூ ரெனச்சொலு மியாழ்ப்பாண நகரிலிசை
யெங்குமுற வருமா மணி

தாரோங்கு புயவீர சூரர்முத லானோர்கள்
தாள்பணிய வுறைமா மணி
தண்ணளி நிறைந்தமொழி பேசுமணி சிவனடிச்
சார்புவளர் மனமா மணி
தக்கபண் டிதமணிக் கதிரேச வணிகமணி
தலைவிமனை மக்கள் மகிழத்
தலைமையுறு பெருவாழ்வு நீடூழி பெற்றருள்
தழைக்கநிதம் வாழி வாழி.

---

*யாழ்ப்பாணத்துத் தமிழாசிரியர் திரு. வே. மகாலிங்க சிவம் அவர்கள் எழுதிய குறிப்பும் பாடலும் இதற்குச் சான்றாவனவாம்.

ஆரிய திராவிட பாஷா பண்டிதசிரோமணியும், அத்யத்புத அதிமதுர வாக்கலங்கார நாவல மணியும், சைவசித்தாந்த சிகாமணியும், திராவிட தேச சர்வவித்வத் சபா மணியும், வைசிய குல மணியும் ஆகிய ஸ்ரீமாந் கதிரேசச் செட்டியாரவர்கள் யாழ்ப்பாணத்து ஆரிய திராவிட சங்கத்து அக்கிராசனத்து அமர்ந்த காலை இயற்றியது.

ஆயுந் தமிழும் வடமொழியும்
அருவந் தீர்ந்தோர் உருவெடுத்த
அருஞ்சட் டகமே! பெருங்கவிஞர்
அமுதங் கனிந்த செழும்பாடல்
தோயு நலங்க ளெடுத்தழகு
சொட்டச் சொட்ட விரித்துரைத்துச்
சுவைசே ரின்பக் கடல்பெருக்கும்
துரையே! உள்ளங் கவர்கள்வா!
காயும் புலவர் மதப்போரைக்
கடக்கும் பெருநா வலரேறே!
கருதுஞ் சைவச் சுடர்வீசுங்
கதிர்மா மணியே! குணக்குன்றே!
வாயும் பெருமைக் கதிரேச
வள்ளால்! நின்சொற் கீடுபட்டு
மதித்தே சூட்டுஞ் சபாமணிப்பட்
டத்தை மறுது சூடுகவே.

வே. மஹாலிங்கசிவம்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாசிரியர்

**திரு. சிந்தாமணி அவர்கள்**

கூறிய வாழ்த்து.

திருமகள் கலைமகள் மலைமகள் திருவருள்
பெருகிய பலர்புகழ் பைந்தமிழ் நாட்டில்
தோன்றிற் புகழொடு தோன்றுக வென்ற
ஆன்றமை சான்றோன் ஆய்வுரைச் சான்றாய்
உலகு காவலன் நகரம் உயரவும்
இலகு தமிழ்த்தாய் இலங்கி யொளிரவும்

அரிதிற் றோன்றி யறுபது யாண்டுகள்
விரிதிரைக் கடலென மீப்புகழ் பரப்பி
இனிதுவீற் றிருக்கும் எங்கள் கோவே !
நனிமகிழ் வெய்தி நாங்கள் வாழ்வுற
நற்றமிழ் ஆட்சி நன்கனம் நடாத்தும்
பொற்புறு கதிரிறைப் புலமை யோனே !
திருமகள் கலைமகள் இருவரும் ஒருங்கே
அருந்தமிழ் நாட்டினை அருந்தமிழ் நாடாச்
செய்திடப் பெற்ற சிறுரை யறிந்தோம்
வியப்பிது மூலம் முதலா மீப்புகழ்
நயக்கும் திருவா திரைகடல் ஞாலம்
விளங்குற வொன்றிடை யிட்ட ஞாயிறு
விளங்கி யிருவரும் வீற்றிருந் தனரே
தண்டமிழ் நாடு தலைசிறந் தோங்கிப்
பண்டைப் பெருமை பாங்குறப் பெற்றினி
இனிதுவீற் றிருக்க இருபெரும் பெரியீர்
இனியும் நீங்கள் நனிபல வாண்டு
எல்லா நலமும் இனிதின் எய்திட
எல்லாம் வல்ல இறைவன் அருள்செய
அவன்தாள் போற்றி அடிபணிந் தேனே
கதிரிறை யவனே ! கனிதமி ழரசே !
எதிரிலை யெனவே இருமொழி கற்றோய் !
அதிர்கடல் ஞாலம் அனைத்தும் ஒளிரும்
கதிரவன் போலக் காண்கபன் றெனே. (க)

அறுபதி னாண்டு மாண்புற
வருந்தமி ழாட்சி பூண்டுமே
பெறலரு நற்சொல் பெற்றுளிர்
பெருந்தகை யின்னும் பல்பகல்
மறுவறு மங்கை பாதியன்
மகிழ்வுறு வாழ்வே போல்மிக
அறல்நெடுங் கூந்த லம்மையொ
டணிமகார் சூழ வாழ்கவே. (உ)

நற்றமிழ் ஓங்குக நாடு சிறக்கவெம்
பொற்கதிர் அண்ணல் பொலிக. (ங)

## விராலூர் திரு. R. M. சுப்பராம ஐயர் அவர்கள்

கூறிய வாழ்த்து.

அண்டினரை யாதரிக்கு மன்பார் கதிரேசப்
பண்டித மாமணியே பாரிடத்துள்—எண்டிசையோர்
போற்றவரும் ஆண்டறுபான் பூர்த்தியைப்பெற் றுயிங்ஙன்
ஏற்றமுற வாழ்க வினிது.

திருநெல்வேலி, தமிழிசைமணி—திருவாளர்

## S. சுந்தரஓதுவா மூர்த்திகள்

கூறிய வாழ்த்து.

சீர்வளர் தமிழிற் றிகழ்பல கலையும்
    செழிப்புறத் தில்லையின் எல்லை
பேர்வளர் அண்ணா மலைநகர்க் கழகம்
    பிறங்கிட அமைத்தநற் பெரும!
நேர்வளர் நுகத்துப் பகலாணி போன்று
    நேர்மையின் வாணிபம் நிகழ்த்திக
கார்வளர் மாட மாளிகை கவின்செய்
    கானாடு காத்தநற் பகமே. (க)

பொருளுளார் எவரும் அடைதரா நற்சீர்ப்
    புகழ்மகட் பொருந்தினை பூமேல்
மருளுறு திறைவன் மலரடி போற்று
    மாண்புறு கலைநலம் வளர்த்தாய்!
தெருளுளார் பலரைத் திரட்டியா ராய்ச்சி
    செயச்செய்து தெளிந்திடச் செய்த
அருளுளாய் உன்போல் யாருளர் அண்ணா
    மலைப்பெயர் அரசர்தம் மணியே. (உ)

கல்வியின் நிலையாய்க் கவின்றுறு மணியாய்க்
    காசினி மகிழ்செய்நற் கூறோய்
பல்கலைக் கழக மொளிபெறச் செய்யும்
    பைங்கதிர்ப் பண்டித மணியாம்
நல்லவொண் புலவன் திருமலி பால
    நகர்வளர் நாவலன் றனது
அல்கலில் அறுபான் ஆட்டைகாண் அவைக்கண்
    அரும்பெருந் தலைமைபூ ணரசே. (ங.)

எண்ணிடுந் தமிழோ டாரிய மினிதின்
இசைபெறப் பயின்றநல் லேறு
நண்ணிடும் அன்ப ருளங்களி தரவே
நவின்றிடுஞ் சொற்பொழி வாளன்
கண்ணெனத் தமிழ்நாட் டினிற்றிகழ் கதிரே
சப்பெயர்க் கவின்மிகு மணிதான்
கண்ணுதற் கடவுள் அருள்தர நின்போற்
காசினி வாழியல் லூழி. (௪)

காரைக்குடி திருவாளர்

## சேவு. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்கள்

கூறிய வாழ்த்து.

அருள்கொழிக்கும் சிவகாமி மகிழுநட ராஜனருட்
பணிபலநன் காற்று சீரால்
பொருள்கொழிக்குந் தனவணிகர் குலவிளக்காய் அவதரித்த
புண்ணியனுங் கன்ய பூமான்
தெருள்கொழிக்கும் தமிழ்க்கலையிற் சீர்த்தியுறு மிசைப்பயிலைக்
கீர்த்திபெறச் செயுஞ்சீ ராளன்
தருகொழிக்குந் தண்ணளியார் செட்டிநாட் டிறைசரண்ணு
மலையெனும்பேர்ச் சான்றோ னுமால். (௧)

அன்னவன்சீர் பன்னுதார் அவனிதனி வாருளரே
அரும்புலவ ரறிஞ ரான்றோர்
சொன்னலமார் சொற்பொழிவுக் கூட்டத்தார் நாட்டமிகு
மிசைவல்லார் நல்லோர் பல்லோர்
பன்னலமார் பத்திரிகை அதிபர்முதற் பண்புறுசீ
மான்களெனும், பகுதி யாளர்
மன்னவரும் அன்னவன்றன் எண்ணரிய கீர்த்தியுறு
சீர்த்தியையே விளம்பு கின்றார். (உ)

இலங்குகின்ற வியல்புறுநற் கீர்த்தியுரை அத்தனையு
மொருங்குறவே இணைத்துச் சேர்த்துப்
பலம்பெருகக் காரைநகர்ப் பணியாளன் திருசேவு
மெய்யப்பன் பகர்கின் றேனுல்
தலம்புகழும் மகிபாலப் பதியதனில் தமிழ்க்குரிசி
லெனப்பலவர் சாற்று மேலோன்

நலம்பெருகு தனவணிகர் குலமணிநம்
    ரேசர் சாந்தி நாளில். (௩)

இன்னலமார் பன்னுயிரு நிதிக்கிழவன் நமதண்ணா
    மலைக்குரிசி லியல்பாப் பேணும்
பன்னலமார் பண்டிதமு கதிரேசப் பாவலனன்
    மணியெனவே பாரோர் போற்றத்
தன்னலமார் கதிர்பரப்பி உலகமெலா மொளிவிளக்கி
    அருள்பெருக்குந் தகைமை யாளன்
இந்நிலத்துப் பெருமக்க ளிருவர்களுங் கிளைஞரொடு
    சிவனருளால் இனிது வாழ்க. (௪)

வாழிதிரு வோங்கி வளர்அண்ணா மலைக்குரிசில்
வாழி யவர்பேணும் வண்டமிழும் நற்கலையும்
வாழி தமிழ்ப்புலவர் வாழிகதி ரேசமணி
வாழி இவர்மரபும் வாழ்த்துரைக்கும் அன்பருமே. (௫)

வாழ்க! வாழ்க!!

திருநெல்வேலி திருவாளர்

## பா. சிதம்பரநாத பிள்ளை அவர்கள்

கூறிய வாழ்த்து.

சீர்பெருகு பாண்டிவள நாட்டினிற் செம்மைநிறை
    திலகமகி பால நகரில்
தினகரன் என்னவரு கதிரேச வணிகமணி
    செப்புந் தவப்பு கழ்மணி
யார்பெருகு பல்கலை நூல்களைக் கற்றுயர்
    பண்புதரு பண்டி தமணி
பல்லரசர் சபைகளில் பான்மைபெறு சொன்மழை
    பாங்குறப் பொழிமு தல்மணி
தார்பெருகு உலகநூல் கற்றமணி சன்மார்க்க
    தனயரைப் பெற்ற மணியாந்
தக்ககதி ரேசமணி மூவிருப தாண்டுநிறை
    சாந்திவிசு வாண்டு கன்னி
ஏர்பெருகு திங்களிரு பத்தாறி லீசனா
    ளியைசித்த யோக மதனில்
எழிலோரை தனுவினில் நிகழ்ந்ததால் இம்மணி
    என்றுநனி வாழ்க மாதோ.

கோனாபட்டு

## திரு. சு. மு. பழ. பழநியப்ப செட்டியார் அவர்கள்

கூறிய வாழ்த்து.

பண்டிதமா மணியென்னுங் கதிரேசன்
பத்தாறி னிறைவுச் சாந்தி
கண்டெனவாய் மொழிநல்லாள் மீனாட்சி
யுடன்மருவிக் கதிர்நாட் கண்டா
னுண்டெனவாம் பேறெல்லா மொருங்கெய்தி
யுயர்மனைவி மக்கள் சூழத்
தண்டமிழான் றொண்டர்பிரான் றண்ணருளா
லெஞ்ஞான்றுந் தழைத்து வாழி. (க)

### வெண்பா

ஆண்டுவிசு கன்னிமதி யாறிருபத் தாறதனில்
ஆண்டருளுஞ் சத்திசிவ னோர்துணைகொண் — டாண்டதொரு
பத்தாறி னன்னிறைவு பண்டித மாமணிக்
கித்திறமே வாழ்க வினிது. (உ)

பாலகவி வயிநாகரம்

## வே. இராமநாதச் செட்டியார் அவர்கள்

கூறிய வாழ்த்து.

தனவணிக நாட்டுநலந் தருசமயத் தமிழன்னை
தழைக்க வென்று
மனநிறையும் பணிபுரிந்தோன் மகிபால நகருதித்தோன்
வளருங் கீர்த்தி
நனியடைந்தோன் பண்டிதமா மணியாறு பத்தாண்டு
நண்ணு நாளி
லினியுமொரு நூற்றாண்டு வளம்பொலிந்து வாழ்கவென
வேத்து வோமே.

பலவான்குடி திருவாசக பாடசாலை

## திரு. சு. அ. இராமசாமி அவர்கள்

கூறிய வாழ்த்து.

செந்தமிழ்தேர் முருகன்றன் றிருவவதா
ரமென்று செகத்தோர் செப்ப

உந்துபுகழ்க் கலைகற்று உயர்ச்சிமிகப்
பெற்றெளிரும் ஒருவ மாண்பார்
பைந்தமிழ்தேர் பண்டிதநன் மணியாகும்
பான்மைமிகப் பரவப் பெற்ற
சந்தனமார் பொதியவரைக் குறுமுனிநேர்
சதுருடையாய் தமியே னுன்னை. (க)

போற்றுதற்கு வாசகங்கள் கணக்கின்றிப்
பற்பலவாய்ப் புகுத லாலே
ஏற்றமொழி தனையறியா தேமிகவும்
வாடிநின்றிங் கிளைக்கின் றேனால்
நாற்றிசையும் போற்றுபுகழ் நாளுமுனை
நன்றாக நாட லாலே
ஊற்றமுடன் புகழ்ப்படந்தா னுனைமறைத்து
விரிந்துநனி யோங்கிற் றம்மா. (உ)

பண்டிதமா மணியே! நீ நூலெழுதும்
பான்மையையான் பரவு வேனோ?
கொண்டிதமா யெல்லாருங் கூத்தாடுஞ்
சொற்பொழிவைக் கூறு வேனோ?
விண்டகலை நூலைநனி விளக்குதிறம்
அதனைத்தான் விளம்பு வேனோ?
எண்டிசையும் மேவுபுகழ் மிகவுடையாய்!
எதனையான் இயம்பு வேனே? (ங)

## நகரம் வித்வான் வே. மு. கந்தசாமி அவர்கள்

கூறிய வாழ்த்து.

திருவளரு மகிபாலப் பதியதனிற்
றனவணிகர் தேர்ந்து செய்த
ஒருபெரிய தவத்தாலே ஓங்குபெரும்
புகழிலங்க வுயர்ந்த சீர்த்தி
பெருகிவரத் தோன்றியபண் டிதமணியே
நின்பெருமை பேசுங் காலை
அருமறைக்கும் மாலயற்கும் அறிவரியோன்
றன்பெருமை யளவிற் றாமால். (க)

பண்டுநாம் மறையோன்பால் வள்ளுவன்கட்
கம்பனிடம் பயின்றோ மிந்நாள்

கண்டனைய மொழியாளன் கலையாளன்
யாரெனவே கருதி யாய்ந்து
கண்டுகொண்டேன் கதிரேசக் கலைக்கடலை
எனக்களித்துக் கலைமா துன்னை
விண்டுநீங் காதரசு வீற்றிருக்கும்
மேன்மையெம்மால் விளம்பற் பாற்றே. (௨)

அன்னை தந்தை எனஏழை மாணவர்கள்
அளவிறந்தோர் வாழ்வை யாய்ந்து
மன்னுமிரு கலையுண்டி மகிழ்ந்தளித்து
மாண்புபெறச் செய்தா யன்பால்
என்னையிரு கலையுண்டி இனிதுபெறச்
செய்தனைமற் றிதன்மே லென்னே
கன்னனினும் கலைக்கொடையாற் கவின்பெற்ற
கதிரேசக் கருணை மூர்த்தி. (௩)

உடனுறையும் பெரும்பேற்றை ஒருநான்கு
வருடமதா யுற்ற தாலே
மடமையெலா மடியோடு மாய்ந்திடவே
மறுவில்தமிழ்க் கல்வி பெற்றேன்
நடராஜப் பெருமான்றன் நல்லருளாற்
பல்லூழி வாழ்க வென்றே
இடையிலொரு கணமுமின்றி யேத்துவதே
என்னாலாங் கைமா றாமால். (௪)

வாழ்கமுது பெரும்புலமைப் பண்டிதமா
மணியெனவே வாய்ந்த பட்டம்
ஏழ்பெரிய தீவிலுளோ ரினிதுணர
வியைந்தகதி ரேச வள்ளல்!
வாழ்கநின்றன் குலமுழுதும் வாழ்கதமிழ்
வையத்தில் வளமிக் கோங்கி
வாழ்கமன் னுயிரனைத்தும் வாழ்கெனவே
வாயார வாழ்த்து வேனே. (௫)

## பண்டிதமணி யவர்கள் மணிவிழா—சிந்தாமணி மாநாடு

முதுபெரும் புலவர் பண்டிதமணி திருவாளர் மு. கதிரேசச் செட்டியார் அவர்களின் அறுபான் ஆண்டு நிறைவுவிழா, சென்னை - சைவசித்தாந்த மகா சமாஜம், வேதாந்த சங்கம் இவற்றின் ஆதரவில், சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் மிகச் சிறப்பாக, 1942-ம் ஆண்டு, சனவரித் திங்கள், 9-ம் நாள் வெள்ளிக்கிழமை முதல், 12-ம் நாள் திங்கட் கிழமை முடிய நான்கு நாட்கள் நடைபெற்றது. அவ் விழாச் சொற்பொழிவுகள், சிந்தாமணி மாநாடாக நடத்தப்

அச் சிந்தாமணி மாநாட்டிற்கு, நந்தாமணி விளக்கான மணிவிழாத் தலைவர் பண்டிதமணியவர்களே தலைமை தாங்கினார்கள்.

அறிஞர்கள் நிறைந்த அழகிய பேரவையில், நீறணியும் நெற்றியின் அழகும், அருள் சுரக்கும் கண்களின் அழகும், புன்னகை பூக்கும் முகத்தினழகும், அறிவு நிரம்பித் ததும்பும் உள்ளத்தினழகும் ஒருங்கு திரண்டு பொலிவுற்று விளங்க, இருக்கையில் அமர்ந்து அவையினரின் உணர்ச்சியைக் கவர்ந்து அன்புக் காட்சி நல்கினார்கள் தலைவர் திரு. பண்டிதமணியவர்கள்!

இன்றமிழ்க் காவியமான சிந்தாமணியிற் காணும் இலம்பகங்களை, ஒவ்வொன்றாகச் சொற்சுவை பொருட்சுவை ததும்ப, முறையே திருவாளர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், திருவாட்டி ஈ. த. இராஜேசுவரி அம்மையார், திருவாளர்கள் அ. கிருட்டினமூர்த்தியார், ரா. பி. சேதுப்பிள்ளையார், ஆர். நடேச நாயகர், அன்பு. கணபதியார், முருக இலக்குவனார், சக்கரபாணியார், ம. இராசமாணிக்கனார், அ. ச. ஞான சம்பந்தனார், மு. இராசக்கண்ணனார் ஆகிய தமிழறிஞர்கள் சொற்பொழிவாற்றினர். இறுதிநாளில், சிந்தாமணியின் இறுதி இலம்பகமாகிய 'முத்தி இலம்பகம்' என்பதுபற்றித் திருவாளர் திரு. வி. கலியாணசுந்தரனார் அவர்கள் ஓர் அரிய உரை நிகழ்த்தினர். 'மண்மகள் இலம்பகம்' பற்றிப் பேசுவதாக இருந்த திரு. வேங்கடராகலு ரெட்டியார் அவர்கள் கூட்டத்திற்கு வர இயலாமற்போயிற்று.

ஒவ்வொரு சொற்பொழிவுக்கும் இறுதியில் தலைவர் திரு. பண்டிதமணியவர்கள் அந்தந்த இலம்பகத்தைப்பற்றிச் சுருங்கிய நேரத்தில் சிறந்த கருத்துக்களைத் தெளிவாகவும் வளமாகவும் இனிது விளக்கினார்கள்.

மாநாட்டின் இறுதிநாளாகிய 12-1-42 திங்கட்கிழமை யன்று, திரு. பண்டிதமணியவர்களைப் பாராட்டும் விழாக் கூட்டம் நடைபெற்றது. அவ் விழாவிற்குச் சென்னை மாநிலக் கூட்டுறவுக் கழகங்களின் பதிவாளராயிருந்த திவான்பகதூர் **கீ. தெய்வசிகாமணி முதலியாரவர்கள்** தலைமை ஏற்றனர்.

திருவாளர் பண்டிதமணியவர்களின் பேச்சுவன்மை யையும், வளமான உரைநடையழகையும், தமிழ் மொழிக் குக் கேடு சூழ்பவரை நோவாமல் நோவவைக்கும் திறனை யும்,இருமொழிப் புலமையையும், இன்னோரன்ன பிறவற்றை யும் இனிது பாராட்டிப் பலர் பேசினர். வித்துவான் திரு. எம். வி. கண்ணபிரானார் ஒரு பாராட்டு இதழை அச் சிட்டு வழங்கினர்.

சென்னைத் தமிழ் அறிஞர் கழகத்தின் சார்பாக அளித்த வாழ்த்தினைத் திருவாளர் வித்துவான் மு. இராசாக்கண்ண னார் படித்தளித்தனர். தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தின் சார்பாகத் திரு. புத்தனேரி. ரா. சுப்பிரமணியனார் வாழ்த் துப் பாவொன்றை இயற்றிப் படித்தார். தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்தின் சார்பான வாழ்த்தினைத் திரு. வித்து வான் ம. இராசமாணிக்கனார் படித்து வழங்கினார். மேற் கண்ட மூன்று கழகத்தாரும் திரு. பண்டிதமணி யவர் களுக்கு நறுமண ரோஜாமாலைகள் அணிவித்தனர்.

பின் திருவாளர்கள் கே. இராமநாதன் செட்டியார் பி. ஏ., பி. எல். (மயிலைத் தமிழ்ச் சங்கம் சார்பாக), டி. கே. சிதம்பரநாத முதலியார் பி. ஏ., பி. எல்., சச்சிதானந்தம் பிள்ளை பி. ஏ. எல். டி., ஈ. த. இராசேசுவரி அம்மையார் எம். ஏ. எல். டி., திவான்பகதூர் டி. எம். நாராயணசாமிப் பிள்ளை பி. ஏ., பி. எல்., கே. எம். பாலசுப்பிரமணியம் பி. ஏ., பி. எல்., ராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், பி. ஏ., பி. எல்., வித்துவான் தெ. பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்., எம். ஓ. எல். (சென்னை வேதாந்த சங்கம், ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபை,

தமிழ் வித்துவான் சங்கம் என்பவற்றின் சார்பாக); ம. பாலசுப்பிரமணிய முதலியார் பி. ஏ., பி. எல். (சைவ சித்தாந்த மகா சமாஜம் சார்பாக); பூ. ஆலால சுந்தரஞ் செட்டியார் எம். ஏ., ஆகிய அறிஞர்கள் திரு. பண்டிதமணி யவர்களின் புலமையைப் பாராட்டி, அவர்கள் ஐந்து நிமி டங்கள் பேசினாலும் அச் சிற்றுரையில் நுண்பொருள்கள் பலவற்றைத் தெளிவாக நகைச்சுவையுடன் பொதியும் பேராற்றல் பெற்றுள்ளமையைப் பெரிதும் புகழ்ந்தனர். பண்டிதமணியவர்கள் யாதொரு பயனுங் கருதாமல் தமிழுக் காகவே தமிழைப் பயின்று பேரறிவு படைத்தவர்கள் என அன்பர்கள் மனமார வாழ்த்தினர்.

சென்னைப் பல்கலைக் கழகத்திலும் அண்ணாமலைப் பல் கலைக் கழகத்திலும் தொடர்புகொண்டு சிறக்கும் பண்டித மணியவர்களின் புலமை இன்னும் தமிழ் நாட்டிற்குப் பெரு கப் பயன்படுமாறு அவர்கள் அகநானூறு போன்ற இலக் கியப் பெருநூல்களுக்கு விரிவுரைகள் எழுதியும், இன்னும் பல நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தும் சீரிய தொண் டாற்ற வேண்டுமென்றும், அவர்கள் இத்தகைய தொண்டு களை மேற்கொள்ள வேண்டுமாயின் மகிபாலன்பட்டியி லிருந்து சென்னைக்கு வந்து இவ்விடமே உறைந்து தமிழ்ப் புலவர்களுக்கும் ஏனைய அன்பர்களுக்கும் புலமை நுட்பம் ஊட்ட வேண்டுமென்றும் அறிஞர்கள் பலரும் வற்புறுத் திப் பேசினர்.

## அன்பர்களின் பாராட்டுக்குப் பண்டிதமணியவர்களின் நன்றியுரை

மெய்யன்பர்களே!

என்னுடைய மணிவிழாவில் பெரியோர்களாகிய என் அரிய நண்பர்கள் பேசிய பாராட்டுரைகளால் யான் என் னையே மறந்து மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்திருக்கின் றேன். இந் நிலையில் யான் பலவாறு பேச இயலாமையை அறிவீர்கள். அன்பர்கள் கூறியபடி தமிழ்ச் சுவையில் வீடு பட்டே தமிழைப் படித்தேன். நீங்கள் எல்லோரும் விரும்பு கிறபடியே சென்னைக்கு வந்து உங்கள் நடுவண் தங்கி

யிருக்கவேண்டும் என்னும் எண்ணமும் அவாவும் எனக்கு உள்ளன. பெரியீராகிய நும் பாராட்டுரையில் என்னிடத்தில் இல்லாச் சில அரிய குணஞ் செயல்கள் உள்ளனவாகச் சொல்லிப் புகழப்பட்டன. உத்தர ராம சரிதம் என்னும் நாடகத்தில் "பெரியோர் சொற்களைப் பொருள் எதிர் பார்த்து எய்த நிற்கும்" என்று கூறப்பட்டுள்ளது. அங்ஙனமே என்பால் இல்லாத குணஞ் செயல்களை உள்ளனவாகக் கூறியது நும் வாய்மொழிகள் பொருள் உடையனவாய் எதிர்காலத்தில் எனக்குப் பயன் செய்வனவாகும் என்னும் நம்பிக்கையுண்டு. எனக்கு "மஹாமஹோபாத்யாய" என்பது போன்ற பட்டங்கள் அரசினர் வழங்க வேண்டும் என்று திரு. K. M. பாலசுப்பிரமணியம் B.A., B.L. அவர்களும், திவான்பகதூர் திரு. தெய்வசிகாமணி முதலியாரவர்களும் பேசியது என்பால் அவர்களுக்கு உள்ள அன்பைப் புலப்படுத்துகின்றது. ஆனால் பேரறிஞர்களாகிய அன்பர்கள் மனம் உவந்து பாராட்டிய புகழுரைகளே எனக்குச் சிறந்த பட்டங்களாகும். இவற்றைவிட வேறு பட்டங்கள் எங்ஙனஞ் சிறந்தனவாகும் என்றுகூட எண்ண வேண்டியதுண்டு. அன்பர்கள் புகழுரைகளைப்பற்றி யொன்று தெரிவிக்க விரும்புகின்றேன். "மழக்கை யிலங்கு பொற்கிண்ணம்" என்று திருவாசகத்திற் கூறியபடி, ஒரு குழந்தையின் கையில் தாய் ஒரு பொற்கிண்ணத்தைக் கொடுத்தால் அதன் அருமை அறியாமல் அக்குழந்தை அதனைக் கீழே போட்டுவிடுமோ என்று அருமைத் தாயானவள் குழந்தை போகும் இடமெல்லாந் தொடர்ந்து சென்று அப் பொற்கிண்ணத்தைப் பாதுகாக்கும் பொறுப்புடையளாவள். அதுபோல என்னைப் பாராட்டிய புகழுரைகளுக்கு ஏற்ப யான் நடந்துகொள்ளுமாறு எனக்குத் துணைநின்று பாதுகாக்கவேண்டிய கடமை நும்பாலதாகும். இன்று விழாவில் என் அரிய நண்பர்களாகிய பலரையும் காணவும் அன்னார் மனம் உவந்து வாழ்த்திய வாழ்த்துக்களைப் பெறவும் கூட்டுவித்த நல்லூழை நினைந்து இன்புறுகின்றேன். இப்பேறு கிடைத்தற்கரியதொன்றாம். இங்ஙனம் எனக்கு வாழ்த்துக்கள் வழங்கிய அன்பர்களுக்கும் பாராட்டுரை நிகழ்த்திய அறிவுடைப் பெருமக்களுக்கும் என் நன்றியறிவைப் புலப்படுத்திக் கொள்வதோடு வணக்கத்தையுஞ் செலுத்துகின்றேன்.

பாராட்டு விழாவில் பண்டிதமணி யவர்களின் மாணவரும்
சென்னைத் தொண்டைமண்டலந் துளுவ வேளாளர்
உயர்தரப் பாடசாலைத் தமிழாசிரியருமாகிய

## வித்துவான் M. C. கண்ணபிரானார் பாடியளித்த

நிலைமண்டில ஆசிரியப்பா.

உலகம் உவக்க உவர்க்கடல் பருகி
மேயநன் னீர்தரு மேகம் போல்வட
கலைக்கடல் பருகிக் கருத்துறு தமிழில்
நூல்பல தந்த நுண்புல முடையோய்,
5. கலைமகள் திருமகள் கனிவுற் றென்றும்
மருவுதல் இலையெனும் மரபினை விலக்கி
இருவரும் பொருந்தி யிருந்திடு மிருப்பாய்
விளங்கியே எம்முன் வீறுகொள் பெரியோய்,
மணிவிலை பகரு மாண்புறு வணிகர்
10. உயர்மணி யுய்த்துணர்ந் துதவுதல் போலச்
செந்தமிழ் மணிகளுட் சிறந்தன இவையெனச்
சிந்தை களித்திடத் தேர்ந்தெடுத் தளிப்போய்,
சேனா வரையர் செவ்விதி னியற்றிய
சொல்லின் உரையினைச் சோர்விலா தாய்ந்தாய்ந்
15. தியற்றமிழ் மாணவர்க் கின்புட னுரைப்போய்,
கருதரும் புலவரின் காவியந் துருவிச்
சுவைத்துச் சுவைத்துச் சுவைப்பட யாண்டும்
கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழியும் வித்தகம் பயின்று
20. நன்னயம் பற்பல நவிலு நாவோய்,
இன்னணம் அமைந்த எழிலுறு மறிவால்
*ஒளியிறை எனநினை ஓதுத லமையும்
ஆயினு மீண்டுநின் னருமை நினைந்து
பண்டித மணியெனப் பட்டம் ஈந்தது
25. புலவரு ளேற்றம் புகலுதற் கன்றோ!
மாண்புறு நின்னுடை மணிவிழா விதனிற்
சிந்தா மணியைச் செப்பும் பொருத்த
மியைந்தது போலெம் இறைவ னருளால்
இடமுறு முடலுந் திறம்பெறு முளமும்
30. வாய்ந்துநற் கிளையுடன் வளம்பல பெற்று
வாழிய வாழிய வாழிய பெரிதே!

*ஒளியிறை - கதிரேசன்.

**தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தின்** சார்பாகக் **கீழ்க்கண்ட** வாழ்த்து, திரு. **புத்தனேரி ரா. சுப்பிரமணியனார்** இயற்றிப் படித்தளித்தது.

ஆசிரியப்பா

தீந்தமிழ்த் தென்னனுஞ் சேரனுஞ் சோழனும
ஏந்தி அன்பினால் இன்றமிழ் போற்றினர்
உள்ள முருக்கிட ஒருகவி ஆக்கிடின்
வள்ள லார்பொருள் வாரி வழங்குவர்.
௫. "பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல" என்றநல் வாக்கினை இன்றுநாள்
பன்னிப் பன்னிப் பைந்தமிழ் நாட்டினில்
என்ன புதியது ஏற்றினர் கேட்டிரோ?
தமிழைப்
௰. போற்றுதல் பழைமை! தூற்றுதல் புதுமை!
புலவரை
ஏத்துதல் பழைமை! இழித்தல் புதுமை!
"புலவர் குழுவினர் பொய்யுரை கூறுவர்
நலமொழி என்றுநீர் நாடன்மின் மக்காள்!
௰௫. வலக்கால் வைத்துநீர் வம்மின் எம்மிடம்!
இலக்கண நூல்களை எறிமின் ஆழியுள்!
பேச்சுத் தமிழிலே பெருநூல் ஆக்கினால்
ஆச்சது இலக்கியம் அன்பர்காள் காணுவீர்!"
என்றெலாம் பழியுரை ஏற்றுதல் புதுமை!
௨௰. நன்று! நன்று!! புதியன புகுதல்!
தமிழைக் கெடுக்கத் தலையெடுத் ததனால்
தமிழரண் புக்குத் தங்கொள் கையினால்
அரணைத் தாக்கிட அணைந்தனர்! ஐயோ!
அரன்வலி கொண்ட அரணது வன்றோ!
௨௫. "கண்டனர் அரணில் பண்டித மணியைக்
கொண்டதஞ் சூழ்ச்சியாற் கொள்கை யுளறினர்!
அஞ்சுவர் கொல்லோ பண்டித மணியும்
செஞ்சொற் கூறிச் சிரித்தவர் மடமை
வெளிப்படக் காத்து வீர நிலையில்
௩௰. ஒளித்திற னுலே உயர்ந்திருக் கின்றார்!
அத்தகை முறையில் அரண்பல செய்து
முத்தமிழ் காக்கும் முதுபெரும் புலவர்

அறுபான் ஆண்டு நிறைந்தனர் இன்னும்
உறுபய னெய்தி உண்மை விளக்கி
௧௫. அமிழ்துண் டவராம் அமரரைப் போன்று
தமிழ்மொழி உய்யத் தமிழரு முய்யத்
தாண்டவப் பெரியோன் தனித்திரு வருளால்
நீண்டநற் காலம் நிலவிவா ழியவே !

* சென்னைத் தமிழ் அறிஞர் கழகத்தார் சார்பாக

**வித்துவான் திரு. மு. இராஜாக்கண்ணனார் அவர்கள்**

படித்தளித்த வாழ்த்துப்பா.

மலரெனப் படுவது தாமரை மலரே
உலகெனப் படுவது புலவர துலகே
அணியெனப் படுவது கல்வியி னணியே
மணியெனப் படுவது பண்டித மணியே
௫. இருமொழிப் புலவன் பண்டித மணியும்
திருமிகு அன்னைத் தீந்தமிழ்க் களிப்போன்
எளிமையும் இனிமையும் மென்மையுங் குழைவும்
தெளிவும் வளமும் சிறந்தநுண் பொருளும்
சொற்றொடர் தோறும் தோன்றி மிளிரும்
௰. நற்றமிழ் உரைநடைக் கோவை நாயகன்
காட்சிக் கெளியன் கடுஞ்சொல் அறியான்
மாட்சிமை தோன்ற மகிழ்ந்துரை செய்வோன்
அன்புரு வாகும் அரன்திரு வன்பன்
என்புரு கிடவே இன்மொழி யதனல்
௧௫. நல்லுரை யாற்றும் சொல்வன் மையுளோன்
அல்லும் பகலுந் தமிழ்நூ லாய்வோன்
அறுபான் ஆண்டு நிரம்பினன் இன்னும்
அறுபான் ஆயிரம் அறுபான் ஆண்டுகள்
வாழ்க ! வாழ்க ! அவன்புகழ் வாழ்க !
௨௦. தமிழுஞ் சைவமுந் தழுவி வாழ்க !
அன்பும் இறையும் அமர்ந்த கோலமென் !

---

* இக் குறிப்பிட்ட மேற்கண்ட வாழ்த்து புத்தனேரி திரு. ரா. சுப்பிர மணியனார் இயற்றியது.

## *சென்னைத் தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தார் சார்பாக வித்துவான் திரு. ம. இராஜமாணிக்கனார் அவர்கள் படித்தளித்த வாழ்த்து.

(கந்துக வரி)

க. வண்டமிழ்ச் சுவையினை வாரிவாரி யாவரும்
உண்டுளங் களித்திட வுரைவிரிக்குஞ் செந்தமிழ்ப்
பண்டிதத் திருமணி வாழ்கபந் தடித்துமே
பைந்தமிழும் வாழ்கவாழ்க வென்றுபந் தடித்துமே.

உ. வளம்படைத்த தேனினிய சொற்கள்கொண்டு வன்மையால்
உளம்படைத்த உண்மையாவும் உள்ளவா றெழுதுவோன்
விளங்குகதி ரேசன் வாழ்க வென்றுபந் தடித்துமே
வீறுகொண்டு தமிழர்யாரும் வாழ்கபந் தடித்துமே.

## மேலைச் சிவபுரிச் சன்மார்க்கசபைத் தமிழாசிரியர் திரு. மீ. முத்துச்சாமிப் பிள்ளையவர்கள் கூறிய வாழ்த்து.

வீங்குகட லுடுத்த வியன்கண் மாநிலத்து
யாங்கணுஞ் சென்று தாங்கும்நல் லாற்றில்
ஏதமில் பொருள்மிக மேவர வியற்றி
ஈத லின்பத் திசைபெறும் மன்னர்
5. பின்னோ ராய பீடுறு வணிகர்
விழுத்திணைத் தோன்றி யொழுக்கத் துயர்ந்து
பழிப்பில் குணனெலாம் பாங்குறப் படைத்தோன்
நனந்தலை யுலகின் நனும்புற விருள்தொலைத்
துள்ளிரு ளகற்று மொளிபெறுக் கதிரை
10. என்னுறு கதிரே சன்னெனு மொள்ளிய
வொருபெயர் தனக்கே உரிதினிற் பூண்டோன்
இருபெரு மொழிக்கும் இயல்வரம் பானோன்
தண்டமி ழவையோர் சால்புற வளித்த

* இக் குறியிட்ட மேற்கண்ட வாழ்த்து புத்தநேரி திரு. ரா. சுப்பிர மணியனார் இயற்றியது.

பண்டித மணிப்பெரும் பட்டம் பெற்றோன்
15. இமையா முக்கண் ணுமையொரு பாகற்கு
ஆரா அன்பின் அகமுவந் தளிப்போன்
வடமொழிக் கடற்படு மணிவரம் பிலாதன
தென்மொழிக் கடலுட் டிறம்பெற வகுப்போன்
இந்நில மருங்கின் எங்கணுந் தமிழ்க்காம்
20. நன்னிலை யம்பல நாட்டிப் புரப்போன்
முத்திறத் தடியவர் வித்தகப் பாடலும்
மணிமொழி யார்புகல் அணிகெழு நூலுமூற்
படுந்தொகை நூலுள் நெடுந்தொகை முதலா
எவ்வகைப் பனுவலும் செவ்வனம் விளக்கி
25. ஒண்பொருள் விரித்து நுண்பொருள் காட்டி
மாணவை யோர்முகன் மனனுடங் கலர்தர
ஏற்றவிவ் வுரைகொளற் கியைதரு பெறுதியும்
ஆற்றுபல் பிறவியுள் நோற்றதன் பயனெனக்
கருதுபு மகிழ்கொளும் விரிவுரை நிகழ்த்துவோன்
30. ஆங்கிலம் பயிலார் அருந்தொழிற் றுறைப்படூஉம்
பாங்கில ரென்றெனும் பான்மையோர் நாண
முத்தமிழ் மண்டலத் தொத்தியன் றொளிறும்
பல்கலைக் கழகம் மல்கவீற் றிருந்தே
அருந்தமி ழறிஞரீண் டடைதரற் கரிய
35. பெரும்பத மேற்றுப் பேணுமவ் வினைத்திறம்
நயனுற நடாத்தும் நல்லிசை யாளன்
ஈழமும் தமிழ்நில மெங்கும் சென்று
ஊழுறு பொருள்விரித் தொண்டிறற் றாணம்
ஆழ நாட்டிய அருங்கலைக் குரிசில்
40. இன்னபல் சிறப்பின் மன்னிய பெருமகன்
இருமூப் பாணுண் டெய்திய மணிவிழா
தன்குல முவப்பத் தமிழக முழுதும்
வதியும் புலவர் துதியுரை கூற
இன்னிய முழங்க வினிதி னேற்றனன்
45. அன்னோன் கற்பி னரும்பெறற் றுணையொடும்
மக்க ளொடுமகிழ்ந் தொக்கலொடும் வாழ்ந்து
நலனொருங் கியைதர நன்கனம் எய்தி
ஊழி பலவாக வாழியர் எனயான்,
ஏத்துவன் தில்லையுட் கூத்துகந் தானையே.

திரு. பண்டிதமணி யவர்களைப் பாராட்டிச் 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்கள் இதழில் எழுதி யிருப்பதிற்

## சில பகுதிகள்

வளம் வாய்ந்த நகரத்தார் நாட்டில், அந் நாட்டுக்குரிய கலைஞானச் செல்வர் கதிரேசனாரும், அரசர் அண்ணாமலையாரும் விழாவில் ஒருமிக்க அமர்ந்து விளங்கிய காட்சி பெரிதும் மகிழ்ச்சிக் குரியதாகும்.

*     *     *     *

திருக்குறள், சிலப்பதிகாரம், சிந்தாமணி, திருவாசகம், பெரிய புராணம் முதலிய செந்தமிழ்ப் பெருநூல்களின் நயங்களை யெடுத்துக் கற்று வல்லோரவையில் திரு. பண்டிதமணி யவர்கள் சொற்பெருக்கிடுங் காலங் களில் இவர்கள் நன்முயற்சியைக் கூர்ந்து நோக்கினால், அப்பெரு நூல்களின் மடிபிடித்து முயன்று முயன்று அமிழ்ந் தொழுக்கும் இவர்களது நுண்மாண் நுழைபுல வொழுக்கம் நேரில் விளக்கமாகத் தெரியும். "நவில்தொறும் நூல் நயம்" என்னும் பொய்யாமொழியின் பொருளைத் தம் செய லாற் பெருமைப்படுத்தும் அருமையாளர் இப் பெரியார்!

*     *     *     *

புலவ ரல்லாதார் நூலியற்றினால் அது நின்று நிலைக் குமா? இலக்கண அமைதி, சுவை நயம், மரபு முறைமை முதலிய நலங்கள் நூல்கள்தோறும் தொடர்ந்து வருதலா லன்றோ, எழுதியோர் கருத்தை என்றும் தெளிவாக அறிந்து கொள்வதற்கு வாய்ப்பிருக்கின்றது! புலவர்க்கன்றோ அத் தகுதி உண்டு.

இக் காலத்தில் பண்டிதமணி போல்வார் சிற்சிலரே அத் தகுதி பெரிதும் உடையராவர்; இவர்கள் திறத்துக்கு இவர்கள் இயற்றிய விழுமிய செய்யுட்கள் பலவற்றுள் இங்கே ஒன்றெடுத்துச் சுவைத்து மகிழலாம்.

"விண்ணிற் செறிந்து கருமுகில் தோன்றினு மிக்கமழை
மண்ணிற் பொழியினுங் காரிருள் தோன்றி மலிகினுமென்?
எண்ணித் துணிந்தவென் காதற் கிழவ னியைபமர்ந்தே
அண்ணிக்கு முள்ளமிவ் வெல்லாத் தடையு மகற்றிடுமே."

(மண்ணியல் சிறுதேர் நாடகம், கஉ.க.)

புலவரல்லாதார் இனைய தீஞ்சுவை நடையில் நூல்க ளெழுதித் தமிழகத்தில் நீடுபயன்பெற நிறுத்துதல் இய

மோ? உரைநடை நூல்கள் எத்தனை காலத்துக்கு நிலைக்கும். அவைதாமும் சொற்சுவை பொருட்சுவை கெழுமிச் செய்யுள் தழுவி இசையொழுகி இயலுமாயினன்றோ நிலை பெறும்!......ஆதலாலன்றோ, இவ் வருமையறிந்த சான்றோர் "கல்வியே கற்புடைப் பெண்டிர்; அதன் செல்வப் புதல்வரே ஈர்ங்கவி" என்று திருவாய்மலர்ந்து, மரபு வளர்ச்சியாகிய நிலையிற் கவிநலனை நினைந்து விரும்பி விளக்கியிருக்கின்றார்.

"(கல்வி) நங்கையைப் பண்புடன் வேட்ட காதற் கொழுநனுங் கலைவல மணமகன் அந் நங்கை நலனெலாம் நன்னர் நுகர்ந்து புலனிரம்பின்பம் பொருந்திய வாழ்க்கையிற் றலைப்படுங்கால், அவ் விருவர்தம் இரண்டற்ற தன்மையின் எழுந்த இன்பநிலையே உருவெடுத்தாங்கு மழவிளம் பாடற்குழவிகள் தோன்றும்."

என்பது திரு. பண்டிதமணியவர்களின் அணிவுரை. இதனால் இவர்கள் கருத்துப் படர்ச்சியின் நலம் நன்கு தெரிகின்றது.

உலகியலின் வாழ்க்கைப் பேறுகளில் மங்கலைச்...... சுவைக்க இருத்திய (புலவர் பெருமக்கள்) அவ் வாழ்க்கைச் சுவைகளை மிகுத்துக்கொண்டே பற்பல ஆழ்ந்த மெய்யுணர்வுகளில் அவர்களை இயக்கி, முடிவாகத் திருவருட் பெருஞ்சுவையில் இரண்டறத் திளைப்பித்து நிலையான பேரின்பப் பெருவாழ்வை வழங்குவோராயுமிருக்கின்றனர்.

"புலமையும் அறிவும் கவிச்சுவையில் வீடுபடுங்கால் இன்பம் அவலம் முதலியனவாகத் தோன்றி, முடிவில் அச்சுவையனைத்தும் தெய்வ நறுங்கனித் தீஞ்சாற்றில் தோய்ந்தனவாகவே புலப்படுவனவாம்."

என்னும் திரு. பண்டிதமணியவர்களின் மணிமொழி இவ்வுண்மையையும் அவர்கள் மெய்ப்புலமையையும் நன்கு விளக்குவதாயிருக்கின்றது.

* * *

கோட்பாடு வழுவாமற் கூறி உலகை அவர்கள் ஒழுங்கான நெறிமுறையிற் செலுத்தும் நேர்மையாளருமாய்த் திகழ்கின்றார்கள். இந் நேர்மைக்குப் பல துறைகளிலும் சிறந்த எடுத்துக்காட்டுகள் அவர்கள் அழகிய நூலுரைகளில் அங்கங்குங் கதிர்கான்று மிளிர்கின்றன. ஓரிடத்தில்,

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே"

என்று காதலின் அளவு நுவலுங் குறுந்தொகைப் பகுதி யொன்றையும்,

"—வேதங்கள்
ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே"

என்று திருவருளின் இயல்பு உணர்த்தும் திருவாசகப் பகுதி யொன்றையும் எடுத்து ஒப்பிட்டு, அவற்றின் வன்மை மென்மையை அளந்து,

நுண்மை ஒன்று மிகுதியாகக் கூறப்பட்டுள்ளது. அதற்குக் காரணம், அணுவினும் அணுவாய் நிற்கும் இறைவனிலக்கணம் இந் நட்புக் குணத்திற்கும் பொருந் தாது என்பதே."

என்று அவற்றின் நுட்ப வேறுபாட்டை அவர்கள் எடுத்து விளக்கிய ஒட்பம் எவ்வளவு மெய்ப்பியலறிவாய் மேதக்க திறனாய் ஓங்கி ஆழ்ந்து அகன்று நுண்ணிதாயிருக்கின்றது! "இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே" என்னும் பொய்யா மொழிக்கு இனைய அளவையுரைக ளல்லவோ நேரிய இலக்கியமாவன!

* * *

மனம் மொழி மெய் என்னும் மூன்று கருவிகளுள் புலவர்கட்குத் தனிச் சிறப்பாக உரிய கருவி, 'மொழி' என்னும் நாவன்மையாகும். மனத்தின் செல்வர் அறவோர்; நாவின் செல்வர் புலவோர்; மெய்யின் செல்வர் தொழி லோர்.

புலவர் பெருமக்கள் இவ் வுலகுக்குச் செய்துவர வேண் டும் இத் தனியுரிமைச் செயலில் திரு. பண்டிதமணி யவர் கள் தலைமணியாகவே திகழ்கின்றார்கள். நூற்பொருள்களை நுனித்துணர்ந்து ஒன்பான் சுவைநலனுந் தென்பாய் நுகர்ந்து அச் சுவைநலம் விரவிச் சிறப்பாக நகைச் சுவை ததும்ப அவைக்களத்தில் அறிவுரை அருளுரைகள் விரித் துரைப்பது அவர்கள் இயல்பு.

எழுத்தாயினும் சொல்லாயினும் தொடுமிடந்தோறுங் காப்பியச் சுவைநலங் கனிந்திருப்பது அவர்கட்குரிய தனிச் சிறப்பாகும். அவர்கள் வாயிலாகச் சிறந்த செந்தமிழ்க் காப்பியங்கள் புதிது எழுமாயின், அவை நீடு நிலைபெற்றுப் பெருவாழ்வு பயப்பது திண்